# மார்க்சிஸ்ட்

**(தத்துவ மாத இதழ்)**

**செப்டம்பர் 2020**

உள்ளடக்கம்:



## வ.உ.சி: ஏகாதிபத்திய எதிர்ப்பும் சமூக நீதிக்கான குரலும்

**கே. பாலகிருஷ்ணன்**

நாட்டின் விடுதலைப் போராட்டத்தில் முத்திரை பதித்தவர் வ.உ.சி. பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராக விடுதலைப் போராட்டத்தை முதன்முதலில் மக்கள் இயக்கமாக மாற்றியவர். மனு கொடுத்து மன்றாடும் இயக்கமாக காங்கிரஸ் இருந்து வந்த நிலையில் வெள்ளை கம்பனிகளுக்கு போட்டியாக மக்கள் ஆதரவோடு கப்பலோட்டிய தமிழன். தொழிலாளர்கள், உழைப்பாளர்கள், கொத்தடிமைகள் என்ற நிலையை மாற்றி பிரிட்டிஷ் எஜமானர்களுக்கு எதிராக நெஞ்சை நிமிர்த்தி போராட வைத்தவர். பிரிட்டிஷ் புகுத்திய ஆங்கில

மோகத்திற்கு எதிராக விடுதலை இயக்கத்தில் மக்களை தமிழ் வழி நின்று திரட்டியவர். சாதி அபிமானம், மத அபிமானம் ஆகியவை மக்கள் ஒற்றுமையை சீர்குலைக்கும் சக்திகளே என புதிய வெளிச்சத்தை பாய்ச்சியவர். அவ்வாறு பிரிட்டிஷ் பேயாட்சியை எதிர்த்து தனித்த அடையாளங்களோடு விடுதலை போராட்டப் பயணத்தை மேற்கொண்ட பெருமை கொண்டவர் வ.உ.சி.

## "வ.உ.சி யின் எலும்பும் ராஜ துவேசத்தை ஊட்டும்"

பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் எந்த அளவு இவர் மீது கோபம் கொண்டிருந்தார்கள் என்பதற்கு அவருக்கு திருநெல்வேலி நீதிமன்ற நீதிபதி பின்ஹே வழங்கிய தீர்ப்புரையை படித்தாலே புரியும்.

"சிதம்பரம் பிள்ளை மேன்மை தாங்கிய மன்னர் பிரானது பிரஜைகளில் இரு வர்க்கத்தாரிடையே (ஆங்கிலேயர், இந்தியர்) பகைமையையும், வெறுப்பையும் ஊட்டுபவர். அவர் வெறுக்கத்தக்க ராஜதுரோகி. அவருடைய எலும்புகள் கூட சாவுக்குப் பின் ராஜ துவேசத்தை ஊட்டும்".

அவருக்கு வழங்கிய தண்டனையும் அளவுக்கு அதிகமானதாகும். ராஜதுரோக குற்றச்சாட்டுக்கு 20 ஆண்டுகள், சுப்பிரமணிய சிவாவுக்கு தனது வீட்டில் அடைக்கலம் கொடுத்ததற்காக மேலும் 20 ஆண்டுகள், மொத்தத்தில் இரட்டை ஆயுள் தண்டனைகள். இத்தண்டனையை ஒன்றன்பின் ஒன்றாக 40 ஆண்டுகள் அனுபவிக்க வேண்டுமென அந்த நீதிபதி தீர்ப்பு எழுதினார்.

இந்த தண்டனையை எதிர்த்து உயர்நீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்தபோது தண்டனை 6 ஆண்டு கடுங்காவல் தண்டனையாக குறைக்கப்பட்டது. ஆனாலும் வ.உ.சி ஒரு ராஜதுரோகி என்ற நீதிபதி பின்ஹேவின் கருத்தில் நாங்களும் உடன்படுகிறோம் என நீதிபதிகள் தங்கள் தீர்ப்புரையில் குறிப்பிட்டனர்.

## சிறைக் கொடுமை

வ.உ.சி.யையும், சுப்பிரமணிய சிவாவையும் அந்தமான் சிறைக்கு அனுப்ப உத்தரவிட்டனர். ஆனால் அந்தமான் சிறையில் அதிகமான கைதிகள் அடைக்கப்பட்டிருந்த காரணத்தினால் அவரை முதலில் கோவை சிறையிலும், பிறகு கண்ணனூர் சிறையிலும் அடைத்தனர். கோவை சிறையில் இவருக்கு இழைக்கப்பட்ட கொடுமை வேறு எந்த அரசியல் கைதிக்கும் இழைக்கப்பட்டதாக கூற முடியாது. எருதுகள் கட்டி இழுக்க வேண்டிய செக்கை, சுட்டெரிக்கும் வெயிலில் இவரது தோளிலே கட்டி இழுக்க

வைத்ததும், அவர் தட்டு தடுமாறி கீழே விழுந்த போதும், அவரை சவுக்கால் அடித்தும் கொடுமைபடுத்தியுள்ளனர். வ.உ.சி.யின் மீதான கொடுமை தாங்காமல் சிறை அதிகாரிகளுக்கே தெரியாமல் சக கைதிகள் செக்கை இழுத்துச் செல்ல உதவுவார்களாம். இன்றைக்கும் கோவை சிறைச்சாலையில் வ.உ.சி. கட்டி இழுத்த அந்த செக்கு பொதுமக்களின் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளது. அதை பார்க்கும் ஒவ்வொருவருக்கும் இவ்வளவு பெரிய செக்கை இழுக்குமாறு வ.உ.சி.யை சித்தரவதை செய்த கொடுமையை எண்ணி அதிர்ச்சியடைவர்.

ஒரு வழக்கறிஞர்; விடுதலைக்குப் போராடக் கூடிய ஒரு அரசியல் போராளி; ஆன்மீகத்தில் நம்பிக்கை கொண்டவர்; தமிழ் இலக்கியத்தில் தலைசிறந்த படைப்பாளிகளில் ஒருவர் என அனைத்தையும் காலில் போட்டு மிதித்து விட்டு வ.உ.சி க்கு சொல்ல முடியாத கொடுமைகள் இழைக்கப்பட்டன. வ.உ.சி.க்கு இழைக்கப்பட்ட கொடுமையானது, அவர் விடுதலைப் போராட்டத்திற்கு தலைமை தாங்கியவர் என்பது மட்டுமல்ல; மாறாக, இந்திய விடுதலை குறித்து அவர் கொண்டிருந்த மாறுபட்ட அணுகுமுறையும் காரணமாகும்.

## இளமை பருவத்தில் நீதிக்கான குரல்

பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்து 18ஆம் நூற்றாண்டு தொடக்கத்திலேயே தென்னகத்தில் பெரும் கிளர்ச்சிகளும் போராட்டங்களும் நடைபெற்றுக் கொண்டிருந்தன. பிரிட்டிஷாரைப் எதிர்த்த போராட்டத்தில் பாஞ்சாலக் குறிச்சியில் வீரபாண்டிய கட்டப்பொம்மன் கைது செய்யப்பட்டு தூக்கிலடப்பட்டார். ஊமத்துரையும், சிவகங்கையில் மருது சகோதரர்கள், திண்டுக்கல்லில் கோபால் நாயக்கர், கோயம்புத்தூரில் கான்கிசா கான், மலபாரில் கேரள வர்மன் இப்படி பலரும் இணைந்து பிரிட்டிஷ் அரசை எதிர்த்து ஒரு கூட்டமைப்பை உருவாக்கி போராட்டத்திற்கு திட்டமிட்டனர். இத்திட்டத்தை அறிந்த பிரிட்டிஷ் ராணுவத்தினர் அதை முறியடித்து கலகப் படை வீரர்கள் அத்தனை பேரையும் கைது செய்து கொடூர அடக்குமுறையை கட்டவிழ்த்துவிட்டனர். மருதுபாண்டியர், வெள்ள மருது ஆகியோரை திருப்பத்தூரில் தூக்கிலிட்டனர். அதே தேதியில் மருதுபாண்டியரின் மகன்கள் சிவத்தம்பி, சிவஞானம், வெள்ளமருதுவின் மகன்கள் கருத்தம்பி, குட்டித்தம்பி, முத்துச்சாமி, ராமநாதபுரம் மன்னர் முத்துக்கருப்ப தேவர் ஆகிய அனைவரும் தூக்கிலிடப்பட்டனர். தாத்தாக்கள், மகன்கள், பேரன்கள் என வித்தியாசமில்லாமல் கைது செய்த அனைவரையும் பிரிட்டிஷார் கூட்டம் கூட்டமாக தூக்கிலேற்றினார்கள். மருதுபாண்டியரின் தலை துண்டிக்கப்பட்டு காளையார் கோவிலுக்கு எடுத்துச் செல்லப்பட்டது. அவருடைய உடல் திருப்பத்தூரில் புதைக்கப்பட்டது.

பிரிட்டிஷ் அரசாங்கத்தை எதிர்த்த இத்தகைய போராட்டங்கள் கொடூரமாக அடக்கப்பட்டாலும், பல நூற்றுக்கணக்கான பேர் தூக்கிலிடப்பட்டு படுகொலை செய்யப்பட்டாலும், மக்கள் மத்தியில் இவர்களின் தியாகம் வீரகாவியங்களாக பேசப்பட்டு வந்தன. இவர்களைப் பற்றிய நாட்டுப்புற பாடல்கள், கதைகள் கிராமங்கள் தோறும் பாடப்பட்டு வந்தன. இத்தகைய பாடல்களை கூட பாடக் கூடாது என்ற பிரிட்டிஷாரின் தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. மக்கள் அதைப் பற்றி கவலைப்படவில்லை.

இந்த தியாக வடுக்கள் நிறைந்திருந்த அந்த பகுதியில்தான் 1872ஆம் ஆண்டும் செப்டம்பர் மாதம் 5ஆம் தேதி வ.உ.சி ஒட்டப்பிடாரத்தில் பிறந்தார். இளம் பருவம் முதலேயே இந்த வீர காவியங்கள் அவரது சிந்தனையில் ஆழமாக பதிந்தன. பள்ளிப்படிப்பை முடித்து, கல்லூரி படிப்பை முடித்து அரசு வேலையில் சேர்ந்த வ.உ.சி க்கு அரசு அலுவலகத்தில் பணிபுரிவதில் ஆர்வமில்லை. பிறகு வழக்கறிஞர் படிப்பு முடித்து வழக்கறிஞராக பணியாற்றினார். வழக்கறிஞராக பணியாற்றும்போது பிரிட்டிஷ் அரசாங்கத்தால் பாதிக்கப்பட்ட ஏழைகளுக்கு இலவசமாகவே வாதாடினார். தவறு செய்யும் அரசு அதிகாரிகள், நீதிமன்ற நீதிபதிகள் உள்ளிட்ட யாரானாலும் அவர்களை எதிர்த்து வழக்கு தொடுத்து அவர்களுக்கு தண்டனை பெற்றுக் கொடுத்தார். அதேபோல ஜமீன்தார்கள், பண்ணையார்கள், போலீசார் ஆகியோர் சாதாரண ஏழை விவசாயிகள் மீது தொடுத்து வந்த தாக்குதல்களை எதிர்த்து, தாக்கியவர்கள் மீது வழக்கு தொடுத்து அவர்களை குற்றவாளிக் கூண்டில் நிறுத்தி தண்டனை பெற்றுத் தந்தார். பொதுமக்களிடம் லஞ்ச லாவண்யத்தில் ஈடுபட்ட துணை நீதிபதிகள் மீது வழக்காடி அவர்களுக்கு தண்டனை பெற்றுக் கொடுத்தது போன்ற காரணங்களால் வ.உ.சி.யினுடைய செல்வாக்கு மக்கள் மத்தியில் உயர்ந்தது. ஏழைகள், அடித்தட்டு மக்கள், விவசாயக் கூலிகள், பணக்காரர்களால் பாதிக்கப்பட்டவர்கள் வ.உ.சி.யை நாடிவந்து தங்களுக்கு நியாயம் கேட்கும் நிலை உருவானது. அதிகாரிகள், நீதிபதிகள், காவல்துறையினர் இவர் மீது கடும் கோபம் கொண்டிருந்தனர்.

ஏழை மக்களுக்காக குரலெழுப்பிய வ.உ.சி. படிப்படியாக பிரிட்டிஷ் ஆட்சி ஏழைகளுக்கு இழைக்கப்படும் அநீதிகளை எதிர்த்து குரல் கொடுக்க முன்வந்தார். அதன்மூலம் பிரிட்டிஷ் ஆட்சியை ஒழித்துக் கட்டுவதன் மூலமே மக்களுக்கு அமைதியான நல்ல வாழ்க்கை அமைத்துக் கொடுக்க முடியும் என்ற முடிவுக்கு வந்து தேசிய இயக்கத்தில் கலந்து கொள்ள முடிவெடுத்தார்.

**மூன்று கோட்பாடுகள்**

வ.உ.சி மூன்று முக்கியமான கோட்பாடுகளை வலியுறுத்தி வந்தார். அதாவது கூட்டுறவு இயக்கம், சுதேசி இயக்கம், தொழிலாளர் இயக்கம் என்ற இந்த மூன்றையும் முன்னிறுத்தினார். தூத்துக்குடியில் சுதேசி பண்டக சாலை ஒன்றை அமைத்து சுதேசிப் பொருட்களை வாங்கி விற்கும் பணியை தொடங்கி வைத்தார். சுதேசி நூற்பாலை ஒன்றை கட்டி அதை செயல்படுத்தினார். சென்னை விவசாய சங்கம் என்ற அமைப்பை துவக்கினார். இவருடைய மொத்த நோக்கமும் பிரிட்டிஷ் ஆட்சிக்கு மாற்றாக சுதேசிப் பொருளாதாரத்தை பலப்படுத்திட வேண்டுமென்பதே. தொழிலாளர்கள், விவசாயிகள் வாழ்வு மேம்படுவது, மாணவர்களுக்கு சுதேசி கல்வியை போதிப்பது, தரிசு நிலங்களை விலைக்கு வாங்கி விவசாயிகளையும், தொழிலாளர்களையம் நவீன தொழில்நுட்பத்தின் மூலம் விவசாயத்தை மேம்படுத்துவது என்ற கொள்கையை பிரகடனப்படுத்தினார்.

ஏற்றுமதி, இறக்குமதி கப்பல் போக்குவரத்து முழுவதும் பிரிட்டிஷ் கைவசமே இருந்தது. சில சுதேசி கம்பெனிகள் கப்பல்களை இயக்கினாலும் பிரிட்டிஷ் கம்பெனிகளோடு போட்டி போட முடியாமல் அது தள்ளாடிக் கொண்டிருந்தன. பிரிட்டிஷ் கம்பெனிகள்தான் இந்தியா, இலங்கை, ரங்கூன், மலேசியா போன்ற நாடுகளுக்கு பொருட்கள் மற்றும் பயணிகளை ஏற்றிச் செல்வது, கொண்டு வருவது என்ற வியாபாரத்தை நடத்தி கொள்ளை லாபம் ஈட்டி வந்தனர். பிரிட்டிஷ் ஸ்டீம் நேவிகேசன் கம்பெனிக்கு போட்டியாக, சுதேசி நேவிகேசன் கம்பெனி என்ற கம்பெனியை வ.உ.சி துவக்கினார். வாடகைக்கு கப்பல் எடுத்து ஓட்டி நடத்த முடியாது என்கிற அடிப்படையில் கப்பல்களை விலைக்கு வாங்கி சொந்தமாக இயக்க முடிவு செய்தார். இந்த கம்பெனிக்கான பங்குதாரர்களை சேர்ப்பதற்கு நாடு முழுவதும் பயணம் செய்து பங்குகளை சேர்த்தார். இவ்வாறு இந்த பங்குகளை சேர்க்க பம்பாய் நகரத்தில் அவர் தங்கியிருந்த போது அவரது மூத்த மகன் உலகநாதன் உடல் நலமின்றி மரணமடைந்தார். அவரது இறுதி நிகழ்ச்சிக்கு கூட வரமுடியாமல் சுதேசி நேவிகேசன் கம்பெனிக்கு பங்குகளை திரட்டும் பணியில் முழு வீச்சுடன் ஈடுபட்டிருந்தார். இந்த கம்பெனியில் இயக்குநர்களாக 15பேர் இருந்தார்கள்.

சுதேசி கப்பல் இயக்குவது பொதுமக்கள் மற்றும் பயணிகள், வியாபாரிகள் மத்தியில் பெரும் வரவேற்பை பெற்றது. பிரிட்டிஷ் கம்பெனியின் கட்டணத்தை விட அதிக கட்டணம் கொடுத்து சுதேசி கப்பலில் பயணிப்பதை அனைவரும் பெருமையாக கருதினார்கள். சுதேசி கப்பல் வெற்றிகரமாக இயங்குவது நாடு முழுவதும் மிகப் பெரும் வரவேற்பை பெற்றது. இதுகுறித்து திலகர் வ.உ.சிதம்பரம்பிள்ளை சுதேசி கப்பல் இயக்குவது, சுதேசி இயக்கத்திற்கு

அவர் செய்துள்ள பெரும் பணி என பாராட்டினார். எங்கள் சாம்ராஜ்யத்தில் சூரியன் மறையாது எனக் கொக்கரித்த பிரிட்டிஷ் முதலாளிகளை எதிர்த்து சுதேசி கப்பல் இயக்கியது எண்ணிப் பார்க்க முடியாத இமாலய சாதனையாகும். சுதேசி கம்பெனி இயங்குவது பிரிட்டிஷ் கம்பெனிக்கு கலக்கத்தை ஏற்படுத்தியது. நாளடைவில் ஒவ்வொரு மாதமும் இக்கம்பெனிகளுக்கு பெரும் நட்டம் ஏற்படும் என்கிற நிலை உருவானது. எனவே பிரிட்டிஷ் கம்பெனி கப்பல் உரிமையாளர்கள் சுதேசி கப்பலை முடக்கி விட வேண்டும்; இதற்கு பொறுப்பாக இருக்கிற வ.உ.சி. யை மிரட்டி பணியவைப்பது; பணியாவிட்டால் சிறைக்கு அனுப்பிட வேண்டும் என அனைத்து முயற்சிகளிலும் வரிந்து கட்டி செயல்பட்டனர். தங்கள் கப்பல் மீது சுதேசி கப்பல் மோதி விட்டது என பொய்ப்புகார் கொடுத்து வழக்கு பதிவு செய்தனர். ஆனால் இத்தகைய சதிகளை எல்லாம் மக்கள் மத்தியில் அம்பலப்படுத்தி, மக்களின் ஆதரவோடு வ.உ.சி முறியடித்தார். பிரிட்டிஷாரின் இந்த நெருக்கடிகளுக்கு மத்தியிலும் மக்களின் ஆதரவு வ.உ.சி.க்கு இருந்தபோதும் சுதேசி கம்பெனியின் பங்குதாரர்கள் மத்தியில் கலக்கம் ஏற்பட்டது. இவர்களைப் பொறுத்தவரை லாபமே குறி. சுதேசி உணர்வை பயன்படுத்தி லாபமடைய வேண்டுமென்பதே இவர்களுடைய அடிப்படையான எண்ணம்.

எனவே, பிரிட்டிஷாரின் நெருக்கடிகளிலிருந்து தப்பித்துக் கொள்ள வ.உ.சி.யை கம்பெனி நடவடிக்கைகளிலிருந்து விலகிக் கொள்ள வேண்டுமென வற்புறுத்தினார்கள். ஆனால் வ.உ.சி.யோ சுதேசி கப்பல் கம்பெனி நடத்துவதை ஏகாதிபத்திய எதிர்ப்பின் பகுதியாகவே மேற்கொண்டிருந்தார். எனவே, இவர்களின் நிர்ப்பந்தத்திற்கு ஆரம்பத்தில் அடிபணிய மறுத்த வ.உ.சி. வேறு வழியின்றி நாடு முழுவதும் இரவு - பகலாக அலைந்து கண்ணின் இமை போல காத்து உருவாக்கிய சுதேசி கம்பெனியிலிருந்து கடைசியாக வெளியேறினார்.

## பாரதி – வ.உ.சி. இரட்டையர்கள்

பாரதியின் தந்தை சின்னச்சாமி ஐயரும், வ.உ.சி. யின் தந்தை உலகநாதப் பிள்ளையும் எட்டையபுரம் சமஸ்தானத்தில் ஒரே காலத்தில் பணியாற்றியுள்ளனர். குடும்ப ரீதியாக இவர்களுக்குள் நெருக்கம் இருந்தாலும் பாரதியும் – வ.உ.சியும் சொந்த ஊரில் சந்தித்துக் கொள்ளவில்லை. 1906ஆம் ஆண்டுவாக்கில் சென்னைக்கு சென்ற வ.உ.சி “இந்தியா” என்ற பத்திரிகையின் அலுவலகத்திற்கு சென்ற போதுதான் பாரதியைச் சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது. இவர்கள் இருவரோடு மண்டையம் திருமாலாச்சாரி, சீனிவாச ராகவாச்சாரியார்

ஆகியோர் நெருங்கி பழகியதன் விளைவாக நாளடைவில் வ.உ.சி. தேசிய இயக்கத்தில் தீவிரமாக ஈடுபடலானார். இவர்களது முயற்சியில் சென்னை ஜன சங்கம் என்ற தேசாபிமானச் சங்கம் அமைக்கப்பட்டது. பின்னர் தூத்துக்குடி திரும்பிய வ.உ.சி. சுதேசி இயக்கத்தில் தீவிரமாக ஈடுபடலானார்.

1907ஆம் ஆண்டு காங்கிரஸ் கட்சியின் மாநாடு சூரத் நகரில் நடைபெறவிருந்தது. இதற்கு முன்னர் கல்கத்தாவில் நடந்த மாநாட்டிலேயே காங்கிரஸ் கட்சி தலைவர்கள் மத்தியில் கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டு அது மோதலாக உருவாகியிருந்தது. தீவிரவாதிகள் எனவும், மிதவாதிகள் எனவும் காங்கிரஸ் தலைவருக்குள் இரண்டு பிரிவு உருவாகியிருந்தது. லால் – பால் - லால் என்று அழைக்கப்பட்ட லாலா லஜபதிராய், பால கங்காதர திலகர், பிபன் சந்திரபால் ஆகியோர் தீவிரவாதிகளாக பிரகடனப்படுத்தப்பட்டார்கள்.

அதாவது, இவர்கள் சுதேசி, சுயராஜ்ஜிய சுதந்திரத்திற்கு இந்தியா போராட வேண்டுமென்றனர். இன்னொரு பிரிவுக்கு தலைவராக இருந்த திரசா மேத்தா, கோபால கிருஷ்ண கோகுலே, ராஷ் பிகாரி போஸ், சுரேந்திரநாத் பானர்ஜி ஆகியோர் மிதவாதக் கருத்துக்களை கொண்டிருந்தனர்.

காங்கிரஸ் கட்சிக்குள் ஏற்பட்ட இருவேறுபட்ட கருத்துக்களுக்கு இந்திய சமூகத்தில் ஏற்பட்ட பொருளாதார மாற்றங்களும் முக்கியமான காரணமாகும். ஆரம்பத்தில் காங்கிரஸ் கட்சி தோற்றுவிக்கப்பட்டபோது ‘மேன்மை தங்கிய’ பிரிட்டிஷ் அரசுக்கு மனு கொடுத்து மன்றாடும் இயக்கமாகவே துவக்கப்பட்டிருந்தது. பிரிட்டிஷ் முதலாளிகள் தங்களது மூலதனத்தை கொண்டு இந்திய மக்களை சுரண்டிய போதிலும் உள்நாட்டில் ஒரு வலுவான முதலாளித்துவம் வளராமல் பார்த்துக் கொண்டார்கள். அவ்வாறு உள்நாட்டு முதலாளித்துவம் வளருமானால் அது தங்களை எதிர்த்து குரல் கொடுக்க முனையும் என்பதை சரியாகவே கணித்து எச்சரிக்கையோடு இருந்தனர். ஆனாலும் பிரிட்டிஷ் குடையின் நிழலிலேயே உள்நாட்டு முதலாளித்துவம் படிப்படியாக வளர்ந்ததும், உலக அளவில் பல நாடுகளில் ஏற்பட்ட அரசியல் மாற்றங்களும் இந்தியாவில் புதியதொரு சூழ்நிலையை உருவாக்கின. அதாவது, உள்நாட்டு முதலாளிகள் மனு கொடுத்து மன்றாடினால் மட்டும் தங்களை வளர்த்துக் கொள்ள முடியாது என்பதை உணர்ந்தனர். இத்தகைய புதிய வளர்ச்சிப் போக்குகளின் விளைவாக சுயராஜ்ஜியம், சுதேசி பொருட்கள் விற்பனை, அந்நியப் பொருட்கள் புறக்கணிப்பு போன்ற கோஷங்கள் எழுந்தன. இத்தகைய கோஷங்களை திலகர் தலைமையிலான

தீவிரவாதக்குழு எழுப்பிய நிலையில் மக்களது பேராதரவு இவருக்கு பின்னால் திரண்டது. எனவே கல்கத்தா காங்கிரஸ் மாநாட்டின்போது தீவிரவாதக்குழுவின் தலைவராக இருந்த திலகரை தலைவராக்க வேண்டுமென பரவலான எதிர்பார்ப்பு இருந்தது. ஆனால் மிதவாதக்குழுவினர் சமரச ஏற்பாட்டின் மூலம் இதை முறியடித்தனர். இந்த நிலையில் 1907ஆம் ஆண்டு சூரத் நகரில் நடைபெறவிருந்த காங்கிரஸ் மாநாட்டில் அவர் தலைமை பொறுப்பு ஏற்க வேண்டுமென்ற குரல்கள் நாடு முழுவதும் வலுவடைந்திருந்தது. சென்னையிலிருந்த பாரதிக்கும் இந்த கருத்து ஆழமாக இருந்தது.

## சுயராஜ்ஜியத்துக்கான செயல்திட்டம்

பாரதி - வஉசி தலைமையில் சூரத் மாநாட்டிற்கு ஏராளமானோர் சென்றார்கள். நாடு முழுவதிலுமிருந்து வந்தவர்கள் மாநாட்டு அரங்கில் கூடியபோது, மாநாடு துவங்கிய உடனேயே தலைவர் தேர்தலில் கடும் மோதல் ஏற்பட்டது. மிதவாத குழுவினர் ஏற்பாடு செய்திருந்த குண்டர்கள் தாக்குதலால் கூட்டம் தொடர முடியாமல் மாநாடு கலைந்தது. அதனை தொடர்ந்து அடுத்த நாள் அரவிந்தர் தலைமையில் நடந்த தேசியவாதிகள் மாநாட்டில் ஒவ்வொரு மாநிலத்திற்குமான பொறுப்பாளர்கள் தீர்மானிக்கப்பட்டது. அதன்படி வங்கத்துக்கு - அரவிந்தர், மராட்டியத்திற்கு திலகர், சென்னை மாகாணத்திற்கு வ.உ.சி பொறுப்பாளர்களாக தீர்மானிக்கப்பட்டார்கள். ஆரம்ப முதலே சுதேசி, சுயராஜ்ஜிய கோட்பாடுகளோடு திலகரின் ஆதரவாளராக இருந்த வ.உ.சி சுயராஜ்ஜியத்தில் தமிழ்நாட்டுக்கு பொறுப்பாளராக தீர்மானிக்கப்பட்டது இயற்கையானதே.

சென்னை திரும்பிய வ.உ.சி.யும், பாரதியும் சுயராஜ்ஜியத்துக்கான செயல்திட்டத்தினை நிறைவேற்றினார்கள். சென்னையை தொடர்ந்து வ.உ.சி தூத்துக்குடி சென்று தனது பணிகளை துவக்கினார். சுயராஜ்ஜிய ஆட்சிக்கு முதல் வழி கடல் வாணிபத்தை கைப்பற்ற வேண்டும். வெள்ளையர்களின் கம்பெனிகளை திவாலாக்க வேண்டும் என்ற நோக்கோடு துவக்கப்பட்டதே சுதேசி நேவிகேசன் கம்பெனி.

வங்காளப் பிரிவினையை எதிர்த்து போராடியதால் கைது செய்யப்பட்ட பிபின் சந்திரபால் விடுதலையானதைக் கொண்டாட வேண்டுமென திலகர் அறைகூவல் விடுத்தார். பல நகரங்களில் சிறப்பாக கொண்டாட வ.உ.சி ஏற்பாடு செய்தார். திருநெல்வேலியில் நடைபெற்ற விழாவில் வ.உ.சி.யும், சுப்பிரமணிய சிவாவும் கலந்து கொண்டு உரையாற்றினர். மக்கள் எழுச்சியுடன் திரண்டனர். ஏகாதிபத்திய எதிர்ப்பு கோஷங்கள் விண்ணைப் பிளந்தன. வெள்ளையர்களையும் அவர்களது எடுபிடிகளையும் மக்கள்

புறக்கணித்தார்கள். மக்களின் உணர்ச்சி கண்டு நடுங்கிய பிரிட்டிஷ் அதிகாரிகள் வ.உ.சி.யையும் - சிவாவையும் மிரட்டி பணிய வைக்கப் பார்த்தார்கள். மார்ச் 9 ஆம் தேதி கொண்டாட்டத்தில் கலந்து கொள்ளக் கூடாது என மாஜிஸ்திரேட் எழுதி கொடுக்க வற்புறுத்தினார். இருவரும் மறுத்து விட்டனர். இருவரையும் அழைத்து மாவட்ட கலெக்டர் விஞ்ச் மிரட்டிய விபரங்களை பாரதியார் பாடல்கள் மூலம் பதிவு செய்துள்ளார். அப்பாடல்களில் கலெக்டர் எவ்வாறு மிரட்டினார்; அதற்கு வ.உ.சி. எவ்வாறு எதிர்குரல் கொடுத்தார் என்பதையும் வடித்துள்ளார்.

தனது மிரட்டலுக்கு பணிய மறுக்கும் இருவரையும் ஓராண்டு பாளை சிறையில் அடைக்க கலெக்டர் உத்தரவிடுகிறார். செய்தியறிந்து நெல்லை நகரமே போர்க்களமாகிறது. மக்கள் மீது மூர்க்கத்தனமான தாக்குதல்கள், பலர் மீது பொய் வழக்குகள் பதிவு செய்யப்பட்டு கைது செய்யப்படுகின்றனர். ஆஷ் என்ற உதவி கலெக்டரை துப்பாக்கியால் சுட்டு ஒரு இளைஞன் உள்பட 4 பேர் மரணமடைந்து விடுகிறார்கள். போலீசார் மீது மக்கள் நடத்திய எதிர்தாக்குதலில் கலெக்டர் விஞ்சுக்கு மண்டை உடைந்தது.

இந்த கலகத்துக்கு தலைமை தாங்கியதாக காரணம் கூறியே வ.உ.சி - சுப்பிரமணிய சிவா ஆகியோர் மீது வழக்குகள் பதிவு செய்யப்பட்டன. இந்த வழக்கில்தான் வ.உ.சி.க்கு இரட்டை ஆயுள் தண்டனை வழங்கப்பட்டது. இத்தண்டனை என்பது இந்த சம்பவத்தை கணக்கில் கொண்டு கொடுக்கப்பட்டவையல்ல. வெள்ளயர்களை எதிர்த்து கப்பல் ஓட்டியது; மக்கள் திரள் போராட்டங்களை உருவாக்கியது போன்ற பழைய காழ்ப்புணர்ச்சிகளின் தொகுப்பாகவே இத்தண்டனை அமைந்திருந்தது.

சிறையிலிருந்து விடுதலையான வ.உ.சி சென்னைக்கு வந்தார். குடும்பத்தை நடத்துவதற்கு வியாபாரத்தில் ஈடுபட்டார். ஆனால் அதில் உரிய பலன் ஏற்படவில்லை. சிறை தண்டனை பெற்றதால் வழக்கறிஞராக பணியாற்றும் உரிமை பறிக்கப்பட்டிருந்தது. நீண்ட போராட்டத்திற்கு பின்னர் அந்த உரிமை அவருக்கு வழங்கப்பட்டு மீண்டும் தூத்துக்குடியில் வழக்கறிஞர் பணியை தொடங்கினார். சிறந்த தேச பக்தராகவும், இந்திய விடுதலைக்கு அளப்பரிய தியாகத்தை செய்த வ.உ.சி. தனது கடைசி நாட்களில் மிகுந்த பொருளாதார நெருக்கடியில் சிக்கித் தவித்தார் என்பது வேதனை மிக்கதாகும்.

வ.உ.சி. சிறந்த இலக்கியவாதியுமாவார். தனது சுய சரித்திரத்தை செய்யுள் வடிவில் எழுதியதில் வ.உ.சி.யே முதலும் கடைசியுமாவார். சிறைத் தண்டனையின்போதும் அதற்கு பின்னரும் இலக்கிய பணியில் தனது கவனத்தை செலுத்தினார். தமிழ்நாட்டில் விடுதலை இயக்கத்தை மக்கள்

இயக்கமாக மாற்றுவதற்கு எளிய தமிழை பயன்படுத்தினார். மேடைப் பேச்சு என்பதை மக்களுக்கு அறிமுகப்படுத்தினார். பிரிட்டிஷ் அரசு ஆங்கில கல்வி மூலம் ஆங்கில மோகத்தை புகுத்தியது. ஆங்கில மோகமும் சமஸ்கிருத மோகமும் ஆதிக்கம் செலுத்தி வந்த நிலையில் தாய்மொழி தமிழுக்கு உத்வேகம் அளித்தவர் வ.உ.சி. எழுதுவன எல்லாம் எளிய நடையில் இருத்தல் வேண்டும். மக்களுக்கு அர்த்தமாகும் இலக்கியத்திலேதான் உயிர் உண்டு என வலியுறுத்தினார். திருக்குறளின் அறத்துப் பாலுக்கு விளக்க உரை எழுதியுள்ளார். முழு திருக்குறளுக்கும் விளக்கவுரை எழுத வேண்டுமென்ற அவரது ஆசை நிறைவேறவில்லை.

## தொழிலாளர் இயக்கத்தில் வ.உ.சி

திருநெல்வேலி பாபநாசத்தில் ஹார்வி என்ற பிரிட்டிஷ் கம்பெனி நூற்பாலை இயக்கி வந்தது. அதன் தொடர்ச்சியாக தூத்துக்குடியில் கோரல் மில் (பவள ஆலை) என்ற நூற்பாலையை உருவாக்கியிருந்தார்கள். இந்த தொழிற்சாலைகளில் தொழிலாளர்கள் கொத்தடிமைகளைப் போல நடத்தப்பட்டு வந்தனர். 10 வயது, 12 வயது சிறுவர்கள் கூட ஈவு இரக்கமின்றி சுரண்டப்பட்டனர். குறைந்தபட்சம் ஒரு நாளைக்கு 12 மணி நேரம் உழைக்க வேண்டும். இடையில் ஓய்வெடுக்கவோ, விடுமுறை எடுக்கவோ கூடாது என்கிற காட்டுத் தர்பார். இந்தக் கொடுமையான தொழிலாளர் சுரண்டலை கண்ட வ.உ.சி கோரல் தொழிலாளர்களை ஒன்று திரட்டி போராட்டத்தில் ஈடுபட வற்புறுத்தினார். வ.உ.சி.யின் அறைகூவலுக்கேற்ப தொழிலாளர்களும், 1908ஆம் ஆண்டு மார்ச் 26ஆம் தேதி வேலைநிறுத்தப் போராட்டத்தில் ஈடுபட்டார்கள். பிரிட்டிஷ் நிர்வாகம் 144 தடையுத்தரவு போட்டு தொழிலாளர்களை நூற்றுக்கணக்கில் கைது செய்து சிறையில் அடைத்தது. குண்டர்களை ஏவி தொழிலாளர்களை தாக்கியது. மில் நிர்வாகமும், காவல்துறையும் தொடுத்த அனைத்து தாக்குதல்களையும் எதிர்த்து தொழிலாளர்கள் உறுதியாகப் போராடினார்கள். தொழிலாளர்களின் குடியிருப்புகளுக்குச் சென்று வ.உ.சி.யும், சுப்பிரமணிய சிவாவும், பவானந்த ஐயங்காரும் கூட்டங்களை நடத்தி தொழிலாளர்களை உற்சாகப்படுத்தினர். தொழிலாளர்களின் உறுதியை கண்ட நிர்வாகம் 10 நாட்களுக்குப் பிறகு தொழிலாளர்களின் கோரிக்கைகளை ஏற்றுக் கொண்டு போராட்டம் முடிவுக்கு வந்தது. இது உரிமைக்கு போராடும் அனைத்துப் பகுதி மக்கள் மத்தியிலும் பெரும் எழுச்சியை பெற்றது. இது தொழிலாளர்களுக்கு புதிய நம்பிக்கையை அளித்தது. இப்போராட்டத்துக்கு தலைமை தாங்கிய வ.உ.சி, சுப்பிரமணிய சிவா, பத்மநாப ஐயங்கார் ஆகியோர் மீது தொழிலாளர்கள் நம்பிக்கை பல மடங்கு உயர்ந்தது.

இந்தப் போராட்டத்திற்கு தலைமை தாங்கிய வ.உ.சி.யை தொழிலாளர்களும், மக்களும் தங்களது தலைவராக ஏற்றுக் கொண்டாடினார்கள். பிரிட்டிஷ் எஜமானர்களை எதிர்த்து தொழிலாளர்கள் போராட்டம் நடத்தியது புதிய வரலாறாகும். தொழிலாளர்கள் போராட்டம் தொழிற்சங்க ,இயக்கம் என்று எதுவும் கேள்விப்படாத நேரத்தில் எத்தனை கொடுமைகள் நடந்தாலும் அடிமைப்பட்டுக் கிடக்க வேண்டும என்பதே பிரிட்டிஷாரின் விதி. அந்த விதியை மாற்றி எழுதியவர் வ.உ.சி.

## தேசிய நோக்கும் சமூக சமத்துவப் பார்வையும்

ஆரம்பத்திலிருந்தே தேச விடுதலைப் போராட்டத்தில் காங்கிரசின் அணுகுமுறையில் மாறுபட்ட கருத்து கொண்டிருந்தார். சூரத் நகரில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டிற்கு பின்னர் சுமார் 20 ஆண்டுகளுக்கு மேல் காங்கிரசிலிருந்து விலகியே இருந்தார். அதேசமயம் பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராக சிம்ம சொப்பனமாக திகழ்ந்தார். அவரது வாக்குமூலத்தின்படியே திலகர், லாலா லஜபதிராய், அரவிந்தர் உள்ளிட்ட தலைவர்களோடு நெருக்கமாக இருந்து பூரண சுயராஜ்யத்திற்கு உறுதியாக குரல் கொடுத்தார். அவர் வாழ்ந்த காலத்தில் சாதி மத சனாதான கருத்துக்கள் கோலோச்சி இருந்த நிலையில் சாதியும் மதமும் மக்கள் ஒற்றுமையை சீர்குலைத்து சுதேசி சிந்தனையை பாழ்படுத்தி விடுமென முழக்கமிட்டவர்.

தேசிய தலைவர்கள் பிராமணர், பிராமணர் அல்லாதோர் பிரச்சினையை பேச மறுத்த காலத்தில், தேசிய சிந்தனையில் வ.உ.சி தீவிரமாக இருந்தபோதும் இப்பிரச்சனை சமூகத்தில் நிலவிவருவதை சுட்டிக் காட்டி அதற்கு தீர்வுகாண வேண்டும் என்று வலியுறுத்தினார். தமிழ்நாட்டில் நீதிக்கட்சி ஆட்சி ஏற்பட்டு வகுப்புவாரி பிரதிநிதித்துவம் அளிக்கும் இட ஒதுக்கீட்டு கொள்கையை செயல்படுத்தினார்கள். நீதிக்கட்சியோடு எந்த தொடர்பையும் கொண்டிராத வ.உ.சி. தமிழகத்தில் நிலவும் பிராமணர், பிராமணரல்லாதோர் பிரச்சனைக்கு தீர்வு காண அரசு உத்தியோகத்தில் வகுப்புவாரி பிரதிநிதித்துவம் செயல்படுத்திட வேண்டுமென வற்புறுத்தினார்.

தேசிய சிந்தனையோடு பல்வேறு போராட்டங்களை வ.உ.சி. முன்னெடுத்தார். அதேநேரம் சாதி மத சிக்கல்கள் குறித்தும், சமூக சமத்துவத்திற்காகவும் குரல் கொடுத்தார். இவர் வாழ்ந்தபோதும் இவர் மறைந்த பிறகும் இவரது அளப்பரிய தியாகத்தை காங்கரஸ் கட்சி அங்கீகரிக்க மறுத்துவிட்டது. ஆனால் மக்கள் என்றென்றும் அவரை நினைவில் வைத்து போற்றுகின்றனர். ஏகாதிபத்திய எதிர் ப்பின் அடையாளமாகவும் தொழிலாளி வர்க்கத்தை திரட்டுவதற்கான வடிவமாகவும் வ.உ.சி திகழ்கிறார்.

## இந்திய விடுதலைப் போராட்டமும் சமூக வீடுதலைக்கான முன்னெடுப்புக்களும்

முனைவர் ப. குமார்

இந்திய விடுதலை இயக்கமும் சாதியும் என்ற தலைப்பு பல முக்கியமான வினாக்களை உள்ளடக்கியது. இந்திய விடுதலைப் போராட்டம் வெறும் அரசியல் போராட்டமாக இருந்ததா? அல்லது சாதிய ஒடுக்குமுறைகள் உள்ளிட்ட சமூக விடுதலையை உள்ளடக்கியதாக இருந்ததா? இந்திய விடுதலைப் போராட்டத்தையும் சமூக விடுதலையையும் இணைத்துப் பார்க்கும் நிலையில் அவற்றுக்கு இடையிலான தொடர்பு மற்றும் வளர்ச்சிப் போக்கை எவ்வாறு புரிந்துகொள்வது? என்ற கேள்விகள் முக்கியமானவை.

இந்திய விடுதலைப் போராட்டத்தை பற்றிக் குறிப்பிடும் போது பிபின் சந்திரா, கே. என். பணிக்கர் உள்ளிட்ட வரலாற்றாசிரியர்கள் பின்வருமாறு குறிப்பிடுகிறார்கள்:

“இந்திய விடுதலைப் போராட்டம் நவீன உலகில் நடைபெற்ற ஒரு முக்கியமான மக்கள் திரள் போராட்டம். அது மொழி, பண்பாடு, கலாச்சாரம், மதம், இனம், சாதி, முரண்பாடான கருத்துக்கள் மற்றும் வெவ்வேறான நம்பிக்கைகளைக் கொண்ட பல பிரிவு மக்களின் ஒன்றுபட்ட போராட்டமாகும்.”

இந்திய விடுதலைப் போராட்டம் எப்படி பல்வேறு பிரிவுகளைக் கொண்ட மக்களை பிரதிபலித்ததோ அதேபோல் சமூக சீர்திருத்தம் குறித்த பல சிந்தனைப்போக்குகளும் அதன் ஊடாக விவாதிக்கப்பட்டது; முன்னெடுக்கப்பட்டது.

### 19ஆம் நூற்றாண்டின் எழுச்சி

இந்தியாவின் அரசியல் தன்மையும் சமூகத்தன்மையும் பல அந்நிய படையெடுப்புகளுக்கு காரணமாக இருந்ததாக கார்ல் மார்க்ஸ் குறிப்பிடுகிறார்.

மேம்படுத்தப்பட்ட நவீனப் போர்கருவிகள், ஒழுங்குபடுத்தப்பட்ட பலமான இராணுவம், அரசியல் அதிகாரம், வலுவான பொருளாதாரம் போன்றவையே காலனிய படையெடுப்புகளுக்கு காரணங்களாக அமைந்தன. இவற்றோடு ஐரோப்பிய கலாச்சார மேலாதிக்கமும் காலனிய படையெடுப்பிற்கும் காலனிய

ஆட்சி நீடித்து நிலைத்திருப்பதற்கும் கணிசமாக பங்காற்றியதாக நிக்கோலஸ் ட்ரிக்ஸ் குறிப்பிடுகிறார்.

இந்திய சமூகத்தை காட்டுமிராண்டிகளின் சமூகம் எனவும், பண்பாடற்ற சமூகம் எனவும் குறிப்பிட்ட ஆங்கில கிழக்கிந்திய கம்பெனியார் இத்தகைய காட்டுமிராண்டிகளின் சமூகத்தை நாகரீகப்படுத்தும் வரலாற்றுப் பணி தங்கள் கைகளில் இருப்பதால் இந்தியாவை ஆட்சி செய்ய வேண்டியது அவசியம் எனக் குறிப்பிட்டனர்.

ஆனால் ஆங்கிலேயர் ஆட்சியில் நடந்தது என்ன? ஆங்கில ஆட்சி நடைமுறைபடுத்திய சமூக பொருளாதாரக் கொள்கைகள், அடிப்படையில் இந்திய வளங்களைக் கொள்ளையடிப்பதற்கும், இந்திய மக்களின் உழைப்பை சுரண்டுவதற்குமே உருவாக்கப்பட்டன. இதன் மூலம் சமூகத்தில் பின்தங்கிய மக்களுக்கு சில உரிமைகள் கிடைத்த அதே வேளையில் அவர்கள் முழு உரிமைகளையும் அடைய முடியாமல் பார்த்துக்கொண்டது. காலனிய ஆட்சியில் சாதிய அமைப்புமுறை நிறுவனமயமாக்கல் மூலம் மேலும் பலப்படுத்தப்பட்டது என்பதுதான் உண்மை . ஆங்கிலேயர்களுக்கு முன்னால் இந்தியாவின் நிலவுடமை ஆட்சியாளர்கள் (பண்டைய காலந்தொட்டு இடைக்காலம் வரை ஆட்சி செய்த இந்து மற்றும் முஸ்லீம் ஆட்சியாளர்கள்) எப்படி சாதிய அமைப்புமுறையை தங்களுடைய சுரண்டலுக்காக பயன்படுத்திக் கொண்டார்களோ அப்படியே ஆங்கிலேயர்களும் பயன்படுத்திக் கொண்டார்கள்.

**நவீன கல்வி முறை**

இந்தியர்களை நாகரீகப்படுத்தும் முயற்சியில் ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் அறிமுகப்படுத்தப்பட்ட நவீன கல்வி முறை முதன்மையான பங்கை வகித்ததாக பெர்னார்டு கோண் குறிப்பிடுகிறார். இந்த நவீன பள்ளிகளை தொடங்கியவர்கள் கிறித்துவ மிஷனரிகளே.

1813ஆம் ஆண்டு சார்ட்டர் சட்டத்தின் மூலம் பிரிட்டிஷ் இந்தியாவில் கிறித்துவ மிஷனரிகள் தங்களுடைய மதப்பிரச்சாரங்களுக்கு அனுமதிக்கப்பட்டார்கள். அதற்கு முன்புவரை அவர்கள் பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்படாத பிரஞ்சு ஆளுமைக்குட்ட இந்தியப் பகுதிகள், குறிப்பாக பாண்டிச்சேரி மற்றும் இந்திய சிற்றரசர்களின் கட்டுப்பாட்டில் இருந்த பகுதிகளில்தான் கிறித்துவ மதப்பிரச்சாரங்களை முன்னெடுத்தார்கள். இம்மதப் பிரச்சாரங்கள் இரண்டு மிகமுக்கியமான அம்சங்களைக் கொண்டிருந்தன. முதலாவது, இந்திய சமூகத்தின், குறிப்பாக இந்து சமூகத்தின் பிற்போக்கு அம்சங்களை கேள்விக்குள்ளாகுவதன் மூலம்

கிறித்துவ மதப்பிரச்சாரத்தை முன்னெடுப்பது. மற்றொன்று நவீன கல்வியை முன்னெடுப்பதன் மூலம் தங்கள் மதப்பிரச்சாரத்தை மேற்கொள்வது. இந்த இரண்டு செயல்பாடுகளுமே இந்திய சமூகத்தில் ஒரு எழுச்சிக்கு வித்திட்டன.

இந்து சமூகத்தில் கடைப்பிடிக்கப்பட்டுவந்த, நவீன காலத்திற்கு பொருந்தாத பல பழக்கவழங்களை கிறித்துவ மிஷினரிகள் விவாதப் பொருளாக்கினர். பெண்ணடிமைத்தனம், சாதிய ஏற்றத்தாழ்வுகள் மற்றும் தீண்டாமைக் கொடுமைகள் போன்றவை அவற்றில் முக்கியமானவை. பதினைந்தாம் நூற்றாண்டு முதலே இந்தியாவில் அச்சுப்பொறிகள் அறிமுகப்படுத்தப்பட்டிருந்தாலும், பத்தொன்பதாம் நூற்றாண்டில்தான் அவை கிறித்தவ மதபிரச்சாரத்தில் பெரும்பங்காற்றின. உதாரணமாக 1847 ஆம் ஆண்டு திருநெல்வேலியில் முதன்முதலாக அச்சுப்பொறி அமைக்கப்பட்டது. முதல் பத்தாண்டுகளுக்குள் 63 வகையிலான பிரச்சார நோட்டிசுகள் சுமார் 4 லட்சத்து 30 பிரதிகள் அச்சடிக்கப்பட்டு மக்களிடையே விநியோகிக்கப்பட்டன. இப்படி தமிழகத்தில், பம்பாயில், கல்கத்தாவில் கிறித்துவ மிஷனரிகளால் முன்னெடுக்கப்பட்ட மதப்பிரச்சாரம் அன்றைக்கு நவீன கல்விக்கு ஆட்பட்டிருந்த இந்தியர்களிடம் தாக்கத்தை ஏற்படுத்தியது. இவர்கள் கிறித்தவ மிஷினரிகளை எதிர்த்தோ அல்லது ஆதரித்தோ இந்து சமூகத்தை சீர்திருத்த முயன்றனர்.

தாமஸ் பெயின், ஜெர்மி பெந்தம், ஜேம்ஸ் மில், ஜான் ஸ்டுவர்ட் மில் மற்றும் ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் போன்றவர்களின் முயற்சியால் சமூக சீர்திருத்தம், பெண்ணுரிமை, அரசியல் விடுதலை போன்ற கருத்துக்கள் இந்தியாவில் பரவத்தொடங்கியது. இது அவ்வெழுச்சியை மேலும் வலுப்படுத்தியது.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்தியர்களின் எழுச்சியின் துவக்கப் புள்ளியாக சமூக சீர்திருத்தம் இருந்தது. சமூக சீர்திருத்தத்தின் மூலம் முதலில் கவனம் செலுத்தப்பட்டது இந்திய பெண்களின் நிலைமையாகும். குறிப்பாக அவர்கள் இந்து மதத்தில் நடத்தப்பட்ட விதம் குறித்தானது.

பிபன் சந்திரா மேற்கோள்காட்டும் ஒரு உதாரணத்தை இங்கே குறிப்பிடுவதன் மூலம் பத்தொன்பதாம் நூற்றாண்டில் பெண்கள் நிலையை ஓரளவிற்குப் புரிந்து கொள்ளமுடியும். அன்றைக்கு வங்காளத்தில் இருந்த 80 வயதைக் கடந்த ஒரு பிராமணருக்கு சுமார் 200 மனைவிகள் இருந்ததாகவும், அவர்களில் மிக வயது குறைந்த மனைவியாக 8 வயது சிறுமி இருந்ததாகவும் பிபன் சந்திரா குறிப்பிடுகிறார். இந்து மதத்தில் பின்பற்றப்பட்ட சதி என்ற உடன்கட்டை ஏறுதல் நடைமுறையால் கணவனை இழந்த பெண்கள் உயிரோடு எரித்துக் கொல்லப்பட்டனர். சமூகத்தின் அடித்தட்டில் இவ்வழக்கம்

இல்லை என்றாலும், அது பிராமண சமூகத்தில் பெரும்பான்மையாக கடைபிடிக்கப்பட்டது. குழந்தைத் திருமணம், பெண் சிசுகொலை போன்றவையும் அதிகமான எண்ணிக்கையில் இருந்தன.

## சமூகசீர்திருத்த இயக்கங்கள்

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய பெரும்பான்மையான சமூகசீர்திருத்த இயக்கங்களும் மேற்குறிப்பிட்ட பிரச்சனைகளிலும் பின்னர் படிப்படியாக சாதிய ஏற்றத்தாழ்வு உள்ளிட்ட பிரச்சனைகளிலும் கவனம் செலுத்தின. வங்காளத்தில் உருவாகிய பிரம்ம சமாஜம் (1828) மற்றும் அதனோடு தொடர்புடைய மற்ற அமைப்புகள், மகாராஷ்டிரத்தில் உருவான பிரார்த்தனை சமாஜம் (1867) பரமஹம்ச மாண்டலி (1840) ராஜஸ்தான் - பஞ்சாப் பகுதிகளில் உருவான ஆரிய சமாஜம் (1875) போன்றவை முக்கியமானவை.

இராஜா ராம்மோகன் ராய் (1772-1833), அக்சய குமார் தத்தா (1820-1886), ஈஸ்வர சந்திர வித்யாசாகர் (1820-1891), கேசப் சந்திர சென் (1838-1884) பக்கிம் சந்திர சட்டர்ஜி (1838-1894), சுவாமி விவேகானந்தா (1863-1902) மற்றும் தயானந்த சரஸ்வதி (1824-1883), போன்ற இந்து மேல்தட்டு வர்க்கத்திலிருந்து உருவான தலைவர்கள் பெரும்பாலும் இந்து மதத்தைக் கேள்விக்குள்ளாக்காமல் அதற்குள்ளாகவே சமூக சீர்திருத்தங்களை முன்னெடுத்தனர்.

மதமும் மதம்சார்ந்த சடங்குகளும் இந்திய சமூகத்தை கட்டுப்படுத்துவதால் சமூக சீர்திருத்தத்தின் முதல்படியாக மதத்தையும் அதுசார்ந்த சடங்குகளையும் சீர்திருத்துவது இன்றியமையாதது. ஆனால் துவக்கக்கால சமூக சீர்திருத்தவாதிகள் பெரும்பாலும் மதத்தின் துணையோடு சீர்திருத்தங்களை முன்வைத்தனர். இதற்கு துணையாக அவர்கள் கடந்த காலத்தை பொற்காலமாக சித்தரித்து தங்களின் கோரிக்கைகளுக்கு துணைக்கு அழைத்தனர். மதத்தையும் அதனுடைய பங்கையும் அவர்கள் கேள்விக்கு உட்படுத்தவில்லை. எம்.ஜி. ராணடே (1842-1901) போன்ற ஒருசிலரே இதிலிருந்து வேறுபட்டனர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சமூக சீர்திருத்த இயக்கங்கள் இந்து சமூகத்தில் இருந்த சாதிய ஏற்றத்தாழ்வுகள் குறிப்பாக தீண்டாமைக் கொடுமைகள் மீது கவனம் செலுத்தின. இந்த காலகட்டத்தில்தான் இந்து மதம் விமர்சனத்திற்கு உள்ளாக்கப்பட்டது.  மகாராஷ்ட்ராவின் ஜோதிராவ் புலே (1827-1890) மற்றும் கேரளத்தின் நாராயண குரு (1855-1928)

ஆகியோரே இத்தகைய மகத்தான பணியை முன்னெடுத்தவர்களில் முக்கியமானவர்கள் ஆவர். இவர்கள் மிகத்தீவிரமாக சாதியமைப்பை எதிர்த்து பிரச்சாரம் செய்ததோடு போராட்டங்களையும் முன்னெடுத்தனர்.

ஜோதிராவ் புலே இந்தியர்களின் சமூக ஏற்றத்தாழ்வுகளுக்கு இந்து மதமும் அதை பாதுகாக்கும் பிராமணியத் தன்மையுமே முக்கிய காரணங்கள் எனக் கருதினார். பிற்படுத்தப்பட்ட மற்றும் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு கல்வி கொடுக்கும் பணியைத் தொடங்கிய புலே படிப்படியாக 1873இல் சத்திய சோதக் சமாஜ் (உண்மையை நாடுவோர் சங்கம்) என்ற அமைப்பை தோற்றுவித்து சாதியமைப்புக்கு எதிரான பிரச்சாரத்தை முன்னெடுத்தார். பிராமணரல்லாதார் இயக்கத்தின் தோற்றமாகக் கருதப்படும் ஜோதிராவ் புலேவின் செயல்பாடு போற்றத்தக்கது. அதேநேரத்தில் பிற்படுத்தப்பட்டவர்களின் சமூக நிலைமைக்கு எப்படி பார்ப்பனர்கள் காரணமோ, அதேபோல தீண்டப்படாதாரின் நிலைமைக்கும் பார்ப்பனர்களும் அவர்களின் மதமுமே காரணம் என்ற புரிதலையே அவருடைய செயல்பாடுகள் கொண்டிருந்தன.

“ஒரு மதம், ஒரு கடவுள், ஒரு ஜாதியே மனிதருக்கு போதுமானது“ என்ற நாராயண குருவின் கொள்கை அவருடைய சீடரான சகோதரன் அய்யப்பனால் “மனிதருக்கு மதமோ, கடவுளோ, சாதியோ தேவையில்லை“ என முன்னேற்றம் கண்டது.

## இந்திய தேசிய காங்கிரசும் சமூக சீர்திருத்தமும்

1885ஆம் ஆண்டு இந்திய தேசிய காங்கிரஸின் தோற்றம் என்பது இந்திய விடுதலைப் போராட்டத்தில் ஒரு முக்கியமான நிகழ்வாகும். இதன் மூலம் அன்றைக்கு சென்னை, பம்பாய், கல்கத்தா உள்ளிட்ட இந்திய நகரங்களில் தோன்றியிருந்த பல மாகாண அமைப்புகள் ஒன்றுபடுத்தப்பட்டு இந்திய தேசிய காங்கிரஸ் உருவாக்கப்பட்டது. இதன் மூலம் இந்தியர்களின் விடுதலை உணர்வு நிறுவனமயமாக்கப்பட்டு ஒருங்கிணைக்கப்பட்டது. இந்திய தேசிய காங்கிரஸ் இந்தியர்களின் விடுதலை உணர்வுகளை ஒருங்கிணைத்த அதே நேரத்தில் சிதறிக் கிடந்த சமூக சீர்திருத்த இயக்கங்களையும் தேசிய அளவில் ஒருங்கிணைக்கும் பணியையும் ஆற்றியது என்பது குறிப்பிடத்தக்கது.

இந்திய தேசிய காங்கிரஸ் தோற்றுவிக்கப்பட்ட இரண்டாண்டுகளில் அது சீர்திருத்த மாநாடுகளையும் முன்னெடுத்தது. பெரும்பான்மையான காங்கிரஸ் தலைவர்கள் சமூக சீர்திருத்தவாதிகளாகவும் இருந்தனர். அவர்களில் முக்கியமானவர்கள் ஆர். ஜி. பந்தர்கர் (1837-1925), எம்.ஜி.

ரானடே (1842-1901), என்.ஜி. சந்தவார்கர் (1855-1923), ஜி.ஜி. அகர்கர் (1856-1895) போன்றோர். அரசியல் விடுதலையையும் சமூக விடுதலையையும் இணைத்தே பிரச்சாரம் செய்யப்பட்டன. 1887ஆம் ஆண்டு முதல் 1906 வரை சமூக சீர்திருத்த மாநாடுகளும் காங்கிரஸ் மநாடுகளின் ஒரு பகுதியாக நடைபெற்றன. இந்திய தேசிய காங்கிரஸில் சீர்திருத்தவாதிகளைப் பின்னுக்குத் தள்ளி திலகர் உள்ளிட்ட தீவிர தேசியவாதிகள் முன்னுக்கு வந்த காலத்தில் சீர்திருத்த செயல்பாடுகளுக்கு பின்னடைவு ஏற்பட்டது.

இந்திய தேசிய காங்கிரஸ் தோற்றுவிக்கப்பட்ட அதேகாலகட்டத்தில்தான் இந்தியாவில், குறிப்பாக தென்னிந்தியாவில் சாதிய சங்கங்கள் தோன்ற ஆரம்பித்தன என்பதையும் நாம் நினைவில் கொள்ளுதல் முக்கியமானதாகும். 1880-கள் முதலே ஆரம்பிக்கப்பட்ட இத்தகைய சங்கங்கள் பிரிட்டிஷ் அரசின் பிரித்தாளும் கொள்கைகள் இதற்கு மிக முக்கிய காரணங்களாக அமைந்தன. 1857ஆம் ஆண்டு முதல் செயல்படத் தொடங்கிய சென்னை, பம்பாய், கல்கத்தா பல்கலைக்கழங்களின் ஆண்டு பட்டமளிப்புவிழா உரைகளில் இத்தகைய சாதி, இன, மதப் பிளவுகளை மேலும் கூர்மையாக்கும் பேச்சுக்கள் காணப்படுவதாக வரலாற்றுப் பேராசிரியர் சுமித் சர்க்கார் குறிப்பிடுகிறார்.

காந்தியின் வருகைக்கு முன்பிருந்த காங்கிரஸின் செயல்பாடு அதை முன்னெடுக்கும் வர்க்கத்தின் நலன்களை கோரிக்கைகளாக மாற்றி பிரிட்டிஷ் அரசுக்கு மனுப்போடும் அமைப்பாக இருந்ததாலும் பழைமைவாதிகள் மற்றும் வைதீக இந்துக்களின், குறிப்பாக பிராமணர்களின், ஆதிக்கம் மேலோங்கியிருந்த காரணத்தால் இத்தகைய சாதிய சங்கங்கள் இந்திய விடுதலைப் போராட்டங்களிலிருந்து தங்களைத் தனிமைப்படுத்திக் கொண்டன. உதாரணமாக கிறித்துவ மிஷினரிகளின் செயல்பாடுகளால் உந்தப்பட்ட சென்னை மகாஜன சபா (அன்றைக்கு இருந்த சென்னை மகாணத்தில் இந்திய தேசிய இயக்கத்தை முன்னெடுத்த முக்கிய அமைப்பு) தாழ்த்தப்பட்ட மக்களின் பிரதிநிதியாக அயோத்திதாச பண்டிதரை தங்கள் வருடாந்தர கூட்டத்தில் கலந்துகொள்ள அழைப்பு விடுத்தது.

1892ஆம் ஆண்டு சென்னையில் மகாஜன கூட்டத்தில் அயோத்திதாசர் கலந்துகொண்டார். தாழ்த்தப்பட்ட மக்களை உயர்த்துதல் தொடர்பாக அயோத்திதாசர் பல கோரிக்கைகளை காங்கிரஸ் தேசியவாதிகளின் முன் வைத்தார். தாழ்த்தப்பட்டவர்களுக்கு கல்வி மற்றும் வேலை வாய்ப்பை வழங்குதல், நிலம் ஒதுக்குதல் போன்ற பொருளாதார கோரிக்கைகளை சென்னை மகாஜன சபை ஏற்றுக்கொண்டது. ஆனால் தாழ்த்தப்பட்டவர்கள்

அனைத்துக் கோயில்களிலும் அனுமதிக்கப்பட வேண்டும் என்ற அயோத்திதாசரின் கோரிக்கை வைதீக தேசியவாதிகளால் பலமாக எதிர்க்கப்பட்டது. சென்னை மகாஜன சபையின் வைதீகத் தன்மையை உணர்ந்த அயோத்திதாசர் காங்கிரஸ் கூட்டத்திலிருந்து வெளியேறியதோடு தாழ்த்தப்பட்ட மக்களை பௌத்த சித்தாந்தத்திற்குள் வழிநடத்தத் தொடங்கினார்.

இந்திய தேசிய காங்கிரஸின் துவக்ககாலம் சமூக சீர்திருத்தக் கருத்துக்களை ஆதரிப்பதில் பல ஏற்ற இறக்கங்களைக் கண்டது. இத்தகைய ஏற்ற இறக்கங்களை காந்தியின் தலைமையேற்பிற்கு பின்னாலும் கூட நம்மால் பார்க்க முடியும்.

## புதிய சகாப்தத்தின் துவக்கம்

இருபதாம் நூற்றாண்டின் இரண்டாவது பத்தாண்டு பல்வேறு வகைகளில் இந்திய விடுதலை இயக்கத்தை அடுத்த பரிணாமத்திற்கு கொண்டு சென்றது. உலகம் இதுவரை கண்டிராத உலக மகாயுத்தம் மற்றும் அதன் தாக்கங்கள், ஆயுத புரட்சியின் மூலம் ஜார்மன்னரின் கொடுங்கோல் ஆட்சி அகற்றப்பட்டு ரஷ்யாவில் சோவியத் குடியரசு அமைக்கப்பட்டதன் மூலம் ஆசிய நாடுகளில் ஏற்பட்ட தொழிலாளர் எழுச்சி மற்றும் காங்கிரஸிற்கு மகாத்மா காந்தி தலைமையேற்றலும் மக்கள் இயக்கமாக காங்கிரஸின் உருமாற்றம் என்பன முக்கியமானவை.

காந்தியின் வருகைக்கு பின்னால் காங்கிரஸ் இயக்கத்தில் இரண்டு முக்கியமான மாற்றங்கள் ஏற்பட்டன. முதலாவது காங்கிரஸ் மொழி வாரி மாநிலங்களாக பிரிக்கப்பட்டது. இது அந்தந்த பிராந்திய மொழியிலேயே காங்கிரஸ் கூட்டங்கள், மாநாடுகள் மற்றும் அதன் நடவடிக்கைகள் அமையவும் வழிவகுத்தது. ஆங்கிலம் படித்தவர்களையும் தாண்டி பிராந்திய மொழிகளில் தலைவர்கள் உருவானார்கள். அடுத்தது, காங்கிரஸின் சந்தா தொகை குறைக்கப்பட்டு நடுத்தர வர்க்கத்தினரும் மற்ற தொழில் செய்வோரும் காங்கிரஸில் பெருமளவிற்கு பங்கெடுக்கும் வகையில் இயக்கம் விரிவுபடுத்தப்பட்டது.

தமிழகத்தில் பிராமணரல்லாதார் சங்கம் உருவாகியதோடு, அது தன்னை தேசிய போராட்டத்தில் இணைத்துக் கொள்ளாமல், காங்கிரஸை பிராமணர்களின் சபை என்று கருதியதாலும், விடுதலைப் போரட்டத்தை பிராமணர்கள் தாங்கள் இழந்த செல்வாக்கை மீட்டெடுப்பதற்கான போராட்டமாக பார்த்ததாலும், இந்திய தேசிய காங்கிரஸிற்கு எதிராகவே செயல்பட்டது. காந்தியின் வருகைக்கு பின்னால் தமிழகத்திலும் பல முக்கிய

மாற்றங்கள் ஏற்பட்டன. ராஜகோபாலாச்சாரி முன்முயற்சியால் பிராமணரல்லாதர் தலைவர்கள் குறிப்பாக திரு. வி. கல்யாணசுந்தரம், பெரியார் ஈ. வெ. ரா., டாக்டர் பி. வரதராஜுலு உள்ளிட்டோர் தமிழக காங்கிரஸின் தலைமை பொறுப்பிற்கு வந்தார்கள். இதன் காரணமாக படிப்படியாக தமிழக காங்கிரஸின் வைதீக பிடி தளர ஆரம்பித்தது.

## காந்தியின் தீண்டாமை ஒழிப்பு

காந்தியின் வருகைக்கு பின்னால் காங்கிரஸில் தீண்டாமை ஒழிப்பு ஒரு முக்கிய பணியாக மாறியது. காங்கிரஸின் தீண்டாமை ஒழிப்பு பணியை புரிந்துகொள்வதற்கு காந்தியின் சாதி மற்றும் தீண்டாமை குறித்த புரிதலை அறிவது அவசியமாகிறது.

இந்து மதத்தில் கடைப்பிடிக்கப்பட்டுவந்த தீண்டாமையை ஒரு பாவச் செயலாக காந்தி பார்த்தார். தீண்டாமை ஒழிக்கப்பட வேண்டியது மிக முக்கியமான மற்றும் முதன்மையான தேசியப் பணியாக காந்தி கருதினார். ஆனால் தீண்டாமைக்கு அடிப்படையாக விளங்கும் சாதி அமைப்பையோ அல்லது வர்ணாசிரம கோட்பாட்டையோ காந்தி கேள்விக்குள்ளாக்கவில்லை. தீண்டாமையை இந்து மதமும் அதன் வேத சாத்திரங்களும் ஆதரிக்கவில்லை என்று வாதிட்டதோடு தன்னை ஒரு இந்துவாகவும் வர்ணாசிரம வாதியாகவும் அழுத்தம் திருத்தமாக குறிப்பிடுகிறார். காந்தியின் தீண்டாமை விலக்கு பிரச்சாரம் எந்த வகையிலும் சாதிமறுப்பு திருமணத்தையோ அல்லது சமபந்தி போஜனத்தையோ ஆதரிக்கவில்லை. காந்தியின் தீண்டாமை ஒழிப்பு என்பது நவீன காலத்திற்கேற்றாற்போல் இந்து மதத்தை சீர்திருத்துவது என்ற அளவிலேயே இருந்தது. இத்தகைய புரிதலோடுதான் தேசியவாதிகள் தீண்டாமை ஒழிப்பை தமிழகத்திலும் இந்தியாவிலும் முன்னெடுத்தனர்.

காந்தியின் தீண்டாமை ஒழிப்பு கொள்கை பல முக்கிய குறைபாடுகளைக் கொண்டிருந்தாலும் அது முதன் முறையாக அகில இந்திய அளவில் விடுதலை இயக்கத்தோடு சேர்த்து முன்னெடுக்கப்பட்டது என்பது ஒரு மகத்தான திருப்புமுனையாகும். 1920கள் முதலே தமிழகத்தில் நடைபெற்ற மாவட்ட, மாநில அளவிலான காங்கிரஸ் மாநாடுகளில் சாதி ஒழிப்பு, தீண்டாமை ஒழிப்பு மற்றும் கோயில் நுழைவு போன்ற பல தீர்மானங்கள் பெரும்பான்மை பலத்தோடு நிறைவேற்றப்பட்டன. தீண்டாமை ஒழிப்பு பிரச்சாரங்களும் முன்னெடுக்கப்பட்டன.

சமூக சீர்திருத்த இயக்கத்திற்கும் இந்திய தேசிய காங்கிரஸிற்கும் இடையிலான விவாதங்கள் தொடர்ந்து நடைபெற்றுவந்தன. 1920களின் கடைசியில் பெரியாருக்கும் காந்திக்கும் இடையிலான சாதி, மதம் மற்றும் தீண்டாமை குறித்த விவாதங்கள், அதேபோல் 1932இல் அம்பேத்கருக்கும் காந்திக்கும் இடையிலான நெருக்கடி போன்றவை காந்தியையும் காங்கிரஸையும் வெகுவாக பாதித்தன. அவர்களின் சிந்தனைப் போக்கில் மாற்றங்களைக் கொண்டுவந்தன. தாழ்த்தப்பட்ட மக்களின் முன்னேற்றத்திற்கான வேலை அதிகப்படுத்தப்பட்டது. அதன் விளைவாகவே 1932ஆம் ஆண்டு இறுதியில் தீண்டாமை ஒழிப்பிற்கான ஒரு அமைப்பு ஏற்படுத்தப்பட்டு அதுபின்னர் 1934இல் ஹரிஜன சேவா சங்கமாக பெயர் மாற்றப்பட்டு மாநில, மாவட்ட, கிராம அளவில் கிளைகளை அமைத்துக் கொண்டு பணியாற்றத் தொடங்கியது. அதேபோல் 1930களில் தாழ்த்தப்பட்ட மக்களின் கோயில் நுழைவு உரிமைக்காக பல கோயில் நுழைவுப் போராட்டங்களை காங்கிரஸ் முன்னின்று நடத்தத் துவங்கியது.

இத்தகைய பணிகள் புதுவேகம் பெறுவதற்கு அப்போது காங்கிரஸ் வேலைகளில் பங்கெடுக்கத் தொடங்கியிருந்த முற்போக்கு சக்திகளான சோஷலிஸ்டுகள் மற்றும் கம்யூனிஸ்டுகளும் மற்றுமொரு காரணமாகும். 1920கள் முதலே சென்னையின் முக்கிய தேசியவாதியாகவும் கம்யூனிஸ்டாகவும் இருந்த சிங்காரவேலர் பெரும் பகுதியான காங்கிரஸ் இயக்கங்களை தீண்டாமை ஒழிப்போடு இணைத்தே நடத்தினார். சிங்காரவேலரின் சீரிய முயற்சியால் சென்னைச் சேரிகளிலிருந்து பல படித்த இளைஞர்கள் காங்கிரஸ் இயக்கத்தின்பால் ஈர்க்கப்பட்டனர். 1934இல் ஹரிஜன சேவா சங்கத்தின் சென்னை மாவட்ட முழுநேர ஊழியர்களாக செயல்பட்ட இரண்டு பேரில் ஒருவர் பி. ராமமூர்த்தி.

சாதி ஒழிப்பு மற்றும் தீண்டாமை ஒழிப்பை தீவிரமாக முன்னெடுத்த சுயமரியாதை இயக்கத்தின் முன்னணி வீரர்களாக செயல்பட்ட பி. ஜீவானந்தம், கே. முருகேசன், டி.என். ராமச்சந்திரன், சி.பி. இளங்கோ உள்ளிட்ட ஏராளமானோர் கம்யூனிஸ்ட்டுகளே.

**கம்யூனிஸ்டுகளின் பங்கு**

1936 முதல் காங்கிரஸ் சோஷலிஸ்ட் அமைப்பின் மூலமாக வெளிப்படையாக காங்கிரஸ் இயக்கத்தில் பங்கெடுத்த கம்யூனிஸ்டுகள் தாழ்த்தப்பட்ட மக்களை தேசிய நீரோட்டத்தில் கொண்டு வந்ததில் முக்கிய பங்காற்றினார்கள். ஒருபுறம் காங்கிரஸ் மற்றும் காந்தியின் தீண்டாமை ஒழிப்பில் உள்ள குறைபாடுகளைச் சுட்டிக்காட்டியும் மறுபுறம் தாழ்த்தப்பட்ட மக்களின் இயக்கங்கள் தேசிய விடுதலைப் போராட்டத்தில் பங்கெடுப்பதன்

அவசியத்தை எடுத்துக்காட்டியும் பிரச்சாரங்களை அவர்கள் மேற்கொண்டனர். தாழ்ப்பட்டவர்களின் உரிமை என்பது வெறும் சமூக மற்றும் கலாச்சார உரிமை மட்டுமல்ல; அது அவர்களின் அரசியல் உரிமை என்று கம்யூனிஸ்டுகள் உரக்க குரல்கொடுத்தனர். ஆறு கோடி தீண்டப்படாதவர்களை முன்னேற்றாமல் தேசத்தின் முன்னேற்றம் இல்லை என்றும், காந்தியும் காங்கிரசும் இதை ஏற்றுக் கொள்ளவேண்டும் என்றும் வலியுறுத்தினர்.

பிரச்சார அளவில் மட்டுமல்ல, செயல்பாட்டளவிலும் கம்யூனிஸ்டுகள் தீண்டாமை ஒழிப்பை முன்னெடுத்தனர். கம்யூனிஸ்டுகளின் வழிகாட்டுதலில் தமிழகத்தில் காந்திய இரவுப் பள்ளிகள் மற்றும் சமத்துவப் பள்ளிகள் செயல்பட்டன. இப்பள்ளிகளில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு கல்வியளிக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்ட அதே நேரத்தில் தாழ்த்தப்பட்ட மாணவர்களோடு அனைவரையும் அமரவைத்து பாடங்கள் போதிக்கப்பட்டன. இராமநாதபுரம் உள்ளிட்ட சில இடங்களில் கம்யூனிஸ்டுகளின் இத்தகைய முயற்சிக்கு பலமான எதிர்ப்புகளும் தோன்றின. வைதீக எதிர்ப்புகளுக்கு அஞ்சிடாமல் இத்தகைய பணிகள் உறுதியாக மேற்கொள்ளப்பட்டன. காங்கிரஸ் சார்பில் நடத்தப்பட்ட அரிஜன சேவா பணிகளில் தங்களை ஈடுபடுத்திக் கொண்ட கம்யூனிஸ்டுகள் அப்பணிகளில் காங்கிரஸின் குறைகளையும் சுட்டிக்காட்ட தயங்கவில்லை.

தொழிலாளர்களையும், கூலி விவசாயிகளையும் அடித்தட்டு மக்களையும் பெரிய அளவில் காங்கிரஸின் தேசிய விடுதலைப் போராட்டத்தில் பங்கெடுக்க வைத்து காங்கிரஸ் இயக்கத்தை ஒரு வெகுஜன மக்கள் இயக்கமாக மாற்றிய கம்யூனிஸ்டுகள் தாழ்த்தப்பட்ட மக்களையும் வெகுவாக பங்கெடுக்க வைத்து போராட்ட உணர்வை ஊட்டினர்.

இப்படி பத்தொன்பதாம் நூற்றாண்டு துவக்கத்தில் இந்தியாவின் எழுச்சியாக ஆரம்பித்த சமூக சீர்திருத்த சிந்தனைகள் பின்னர் அரசியல் விழிப்புணர்வாக பரிணமித்தது. இந்திய தேசிய காங்கிரஸின் தோற்றத்திலும் வளர்ச்சியிலும் அதன் செயல்பாட்டிலும் சாதிய ஒடுக்குமுறை மற்றும் பெண்ணடிமைத்தனத்திற்கு எதிரான போராட்டங்கள் பின்னிப் பிணைந்துள்ளன. இந்திய விடுதலையில் நேரடியாக பங்களிப்பு செய்யாத தலைவர்களும் அதனுடைய கொள்கை மற்றும் செயல்பாடுகளை மறைமுகமாக வளர்த்தெடுத்ததில் பங்காற்றியுள்ளனர் என்பதை மறுப்பதற்கில்லை. இந்திய தேசிய காங்கிரஸில் இருந்த பிற்போக்கு சக்திகள் சமூக சீர்திருத்த இயக்கத்தை பின்னுக்கு இழுத்த நிலையில் அவ்வியக்கத்தில் இருந்த முற்போக்கு சக்திகள் மேலும் பலமான முறையில்

சமூக சீர்திருத்தத்தையும் இந்திய விடுதலை இயக்கத்தையும் இணைத்தே முன்னெடுத்தனர் என்பதைத்தான் இந்திய விடுதலைப் போராட்ட வரலாறு நமக்கு எடுத்துரைக்கிறது.

## வள்ளலார் ஏற்றிய விளக்கு - இன்றைக்கும் வெளிச்சம் தரும்

- மதுக்கூர் இராமலிங்கம்

“சாதியிலே மதங்களிலே சமய நெறிகளிலே
சாத்திர சந்தடிகளிலே கோத்திரச் சண்டையிலே
ஆதியிலே அபிமானித்து அலைகின்ற உலகீர்
அலைந்து அலைந்து வீணே நீர் அழிதல் அழகலவே...“

என்ற இந்தக் குரல் ஒரு நாத்திகருக்குச் சொந்தமானது அல்ல. வள்ளலார் என்று தமிழ்ச் சமூகத்தால் கொண்டாடப்படுகிற இராமலிங்க அடிகளாருக்கு சொந்தமானது.
நான்கு வர்ணத்தை அடிப்படையாகக் கொண்ட பழய சமூக அமைப்பை இந்த நவீன யுகத்திலும் கைவிட ஆர்எஸ்எஸ் பரிவாரம் தயாராக இல்லை. மதச்சார்பற்ற, அரசியல் சட்டத்தின் இடத்தில் மநு நூலை வைக்கத் துடிக்கின்றனர். வரலாற்றுச் சக்கரத்தை பின்னுக்குத் தள்ளி வேதகாலத்திற்கு கொண்டு போய் விட முடியுமா என்று முயற்சித்துக் கொண்டிருக்கின்றனர். ஆனால், ‘நான்கு வர்ணங்களும் நால்வகை ஆசிரமங்களும் ஆசாரங்களும் இவை சொன்ன சாத்திர சரிதங்களும்’ வெறும் பிள்ளை விளையாட்டு என்று எள்ளி நகையாடியவர் 19 ஆம் நூற்றாண்டில் தமிழகத்தில் வாழ்ந்த ராமலிங்க அடிகளார் .
1823 ஆம் ஆண்டு சிதம்பரம் அருகே உள்ள மருதூர் என்ற சிற்றூரில் அவர் பிறந்தார். அடுத்த ஆண்டு அவரது குடும்பம் சென்னைக்கு குடிபெயர்ந்தது. 1858 ஆம் ஆண்டு வரை சென்னையில் குடியிருந்திருக்கிறார். மொத்தம் 50 ஆண்டுகள் 9 மாதங்கள் அவர் வாழ்ந்திருக்கிறார்.

அவருடைய வாழ்க்கை குறித்து பல்வேறு புனைவுகள் உருவாக்கப்பட்டுள்ளன. அந்த புனைவுத் திரைகளை நீக்கிப் பார்த்தால்தான் வள்ளலார் என்கிற சமூக சீர்திருத்தவாதியை புரிந்து கொள்ள முடியும். அவர் பிறந்த போது தேவர்கள் பூமாரி பொழிந்தனர் என்பதில் துவங்கி சிதம்பரம் கோவிலுக்கு குழந்தையை தூக்கிச் சென்றபோது, சிதம்பரம் நடராஜரின் ஆனந்த தாண்டவத்தை கண்டு

அந்தக் குழந்தை சிரித்தது. அங்கிருந்த தீட்சிதர், இது அம்பலவாணரின் அருட்குழந்தை என வாழ்த்தினார் என விரிந்து தண்ணீரால் விளக்கு எரித்தார் என்றெல்லாம் சென்று, இறந்தவர்களை உயிர்ப்பிக்கும் ஆற்றல் அவருக்கிருந்தது என்றெல்லாம் பல கதைகள் இருக்கின்றன. இத்தகைய கதைகளை அவரே விரும்பவில்லை என்பது மட்டுமல்ல, அவர் செய்ய விரும்பிய பணிகளுக்கு இவையெல்லாம் பெரும் இடையூறாக இருந்ததும் தெரிய வருகிறது.

## இயற்கைக்கு மேலானது எதுவுமில்லை

வள்ளலாரின் தலைமைச் சீடரான தொழுவூர் வேலாயுத முதலியார், பிரம்ம ஞான சபையினருக்கு அளித்த வாக்குமூலத்தில், ‘அவர் சாதி வேற்றுமைகளை கண்டித்து பேசியதால், அனைவரது பெரும் பாராட்டுக்குரியவராக இல்லை. . ஆயினும், எல்லா சாதியாரும் பெருந்திரளாக அவரை சூழ்ந்திருந்தனர். உபதேசங்களை கேட்டு . பயன்பெற அவர்கள் வரவில. சித்தாடல்களை கண்டுகளிக்கவும் அவற்றின் பயனைப் பெறவுமே வந்தனர். சித்தாடல்களில் அவர் வல்லவர். இயற்கைக்கு மேம்பட்ட எதையும் அவர் ஒப்புவது இல்லை. தமது  மார்க்கம் தூய அறிவியலையே அடிப்படையாகக் கொண்டது என்று இடையறாது வலியுறுத்துவார்’ என்று கூறியுள்ளது மனங்கொள்ளத்தக்கது.
மேலும், வள்ளலார் இறந்தவர்களை குறிப்பிட்ட நாளில் பிழைக்க வைக்கவிருப்பதாக வதந்தி பரவ, அதை அவரே மறுத்து, அவ்வாறு எதுவும் நடக்காது, யாரும் வந்து ஏமாற வேண்டாம் என்று பொது அறிவிப்பாக நோட்டீஸ் அடித்து வெளியிட்டுள்ளார். அதேநேரத்தில் சித்த மருத்துவம் குறித்து பல்வேறு ஆய்வுகளை நடத்தியுள்ள அவர், அதைக் குறிப்புகளாகவும் எழுதி வைத்துள்ளார்.
வள்ளலார் உருவானதன் காலப் பின்னணியை புரிந்து கொள்வது அவரைப் புரிந்து கொள்ள உதவும். அந்நிய ஆட்சி, கிறிஸ்துவ போதகர்களின் தொண்டு போன்றவை நிலவுடமை சமூகத்தில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தி விடவில்லை என்ற போதும் , ஒரு சில அதிர்வுகளை  எழுப்பத் துவங்கியிருந்தது. தமிழகத்தின் தென்கோடியில் வைகுண்ட சுவாமிகள் புறப்பட்டு, சாதி ரீதியாக ஒடுக்கப்பட்டிருந்த மக்களை குறிப்பாக நாடார் சமூக மக்களை தட்டி எழுப்பினார். சென்னையில் பிரம்ம சமாஜத்தின் கிளை உருவாக்கப்பட்டிருந்தது.
சென்னை மாகாணத்தில் 19 ஆம் நூற்றாண்டின் முதல் பாதியில் உருவான ஏழு கடுமையான பஞ்சங்களில் 15 லட்சத்திற்கும் மேற்பட்ட மக்கள் இறந்தனர். இதே நூற்றாண்டின் பிற்பகுதியில் உருவான 24 பஞ்சங்களில் 2 கோடி மக்கள் இறந்தனர். இந்தப் பஞ்ச காலத்தில் மக்கள் படும் பாட்டை

காணச் சகியாமல் சென்னையை விட்டு அவர் வெளியேறியதாக ஒரு குறிப்பு உண்டு. “தேட்டிலே மிகுந்த சென்னையில் இருந்தால் சிலுகுறும் என்றுளம் பயந்தே” என்று அவரே பாடியிருக்கிறார். ‘வாடிய பயிரை கண்ட போதெல்லாம் வாடினேன்’ என்று அவர் பாடியது பஞ்சத்தை, பசியை சகிக்காமல்தான். அவர் வாழ்ந்த காலம் விடுதலைப் போராட்ட இயக்கம் ஒரு அரசியல் இயக்கமாக வளராத காலம். அவரது மறைவுக்குப் பிறகுதான் காங்கிரஸ் இயக்கம் உருவானது. எனினும், தன்னுடைய பாடலில் ‘கருணையிலா ஆட்சி கடுகி ஒழிக, அருள்நயந்த நன்மார்க்கர் ஆள்க - தெருள் நயந்த நல்லோர் நினைத்த நலம்பெறுக நன்று நினைத்து எல்லோரும் வாழ்க இசைந்து’ என்று பாடியுள்ளார்.

## பழமைவாதங்களை எதிர்த்த கிளர்ச்சியாளர்

ஆங்கிலேயர்கள் கொண்டு வந்த நவீன கல்வி முறை பரவியதால், நவீன சிந்தனையோட்டமும் வளரத் துவங்கியது. அறிவியல் கண்ணோட்டமும் அறிமுகமாகியது. இதன் விளைவாக சமூக சீர்திருத்த இயக்கங்களும் உருவாகத் துவங்கின. துவக்கத்தில் வள்ளலார் பக்திப் பனுவல்கள் எழுதும் பக்தி நெறிப் புலவராகவே இருந்திருக்கிறார். பெரும்பாலான பாடல்கள் சிவனை, முருகனை பாடும் பக்திப் பாடல்களாகவே இருக்கின்றன. திருவருட்பாவின் ஐந்தாம் திருமுறையில் காணப்படும் சில பாடல்களும், ஆறாம் திருமுறையும் வள்ளலார் என்கிற சமூக சீர்திருத்தவாதியை, உலக உயிர்களிடத்து எல்லாம் இரக்கம் காட்டுகிற, அன்பு கொள்கிற, ஆன்ம நேய ஒருமைப்பாட்டாளரை, சாதி, மதங்களுக்கு எதிராகவும் வர்ண முறைக்கு எதிராகவும் ஆச்சாரங்களுக்கு எதிராகவும் பெரும் குரலெடுத்துப் பேசுகிற கிளர்ச்சியாளரை அடையாளம் காட்டுகிறது.

செய்யுளை கவிதையாக்கிய முன்னோடிகளில் ஒருவர் வள்ளலார். இந்த வகையில் பாரதியாருக்கு முன்னோடியாக அமைந்தவர் இவர். கருத்துக்களில் மட்டுமல்ல, கவிதையிலும் வள்ளலாரை பாரதியார் தன்னுடைய முன்னோடியாக கொண்டுள்ளார். ‘ஒழிவிலொடுக்கம்’ உள்ளிட்ட நூல்களை பதிப்பித்தவர். அவர் எழுதியுள்ள ‘மநு முறை கண்ட வாசகம்’ அற்புதமான உரைநடை நூல். இது அன்றைய சூழலில் ஒரு அரசியல் செயல்பாடு என்று அறிந்து கொண்டதால்தான், வள்ளலாரை எதிர்த்த யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் ‘பெரியபுராண வசனம்’ எழுதினார் என்று முனைவர் வீ.அரசு கூறுவதை கருத்தில் கொள்ள வேண்டும். பண்டிதர்கள் மட்டுமே புரிந்து கொள்ளக் கூடிய செய்யுளிலிருந்து உரைநடைக்கு மாறுவதற்கு அச்சு எந்திரங்களின் வருகையும் ஒரு காரணமாக இருந்தது என்பதோடு, தன்னுடைய கருத்துக்களை வெகு மக்களின் மொழியில் பேசி அவர்களிடம் கொண்டு செல்ல வேண்டும் என்ற நோக்கமும் வள்ளலாருக்கு

இருந்திருக்க வேண்டும்.
மநு முறை கண்ட வாசகத்தில் வள்ளலார் எழுதியுள்ள சில வரிகள், அவருள் ஏற்பட்டிருந்த மாற்றத்தையும், மொழி அழகையும் புரிந்து கொள்ள உதவும்.
'நல்லோர் மனத்தை நடுங்கச் செய்தேனோ.. குடிவரி உயர்த்தி கொள்ளை கொண்டேனோ.. ஏழைகள் வயிறு எரியச் செய்தேனோ... கற்றவர் தம்மை கடுகடுத்தேனோ... பட்சியை கூண்டில் பதைக்க அடைத்தேனோ... கன்றுக்கு பாலூட்டாது கட்டி வைத்தேனோ... கல்லும் நெல்லும் கலந்து விற்றேனோ... வெயிலுக்கு ஒதுங்கும் விருட்சம் அழித்தேனோ... தந்தை-தாய் மொழியை தள்ளி நடந்தேனோ...' என்று எழுதிச் செல்கிறார்.
கன்றை கொன்ற மனுநீதிச் சோழன் புலம்புவதாக அமைக்கப்பட்டுள்ள இந்த வரிகளின் வழியாக, அவர் வாழ்ந்த காலத்தின் சமூகக் கொடுமைகளை பட்டியலிடுகிறார். வரிக் கொடுமையிலிருந்து கலப்படம் வரை தாய் மொழியை தள்ளி வைப்பது வரை விரிவாக எடுத்துரைக்கிறார். ஜீவகாருண்ய ஒழுக்கம் என்ற உரைநடை நூலையும் எழுதியுள்ளார். கல்வெட்டு ஆராய்ச்சியிலும் ஈடுபட்டுள்ளார்.

## தமிழ் மொழிப் பற்று

வள்ளலார் தன்னுடைய தாய்மொழியான தமிழ்மொழி மீது தாளாத பற்று கொண்டிருந்தார். அவர் சமஸ்கிருதத்தை கற்று வேதங்களையும் படித்திருந்தார். ஆனால், வேதம் அவருக்கு உவப்பானதாக இல்லை.
'இடம்பத்தையும் ஆரவாரத்தையும் பிரயாசத்தையும் பெரு மறைப்பையும் போது போக்கையும் உண்டு பண்ணுகிற, ஆரிய, முதலிய பாஷைகளில் எனக்கு ஆசை செல்ல ஒட்டாது. பயிலுதற்கு மறிதற்கும் மிகவும் மிலேசமுடையதாய்ப் பாடுவதற்கும் துதித்தற்கும் மிகவும் இனிமையுடையதாய், சாகாக் கல்வியை லேசில் அறிவிப்பதாய் திருவருள் வலர்த்தாற் கிடைத்த தென்மொழி யொன்றி நடந்தே, மனம் பட்டச் செய்து அததென் மொழிகளாற் பலவகை தோத்திரப் பாட்டுகளை பாடுவித்து அருளினீர்' என்று இறைவனிடத்தில் விண்ணப்பம் செய்துள்ளார்.
இராமலிங்க அடிகளார் சென்னையில் இருந்த போது சங்கராச்சாரியாரை சந்தித்திருக்கிறார். அப்போது சங்கராச்சாரியார் சமஸ்கிருதமே மாத்ரு பாஷை. அதாவது, அனைத்து மொழிகளுக்கும் தாய்மொழி என்று கூற, அதை மறுத்த வள்ளலார், 'தமிழ் பித்ரு பாஷை' என்று மறுத்து வாதிட்டுள்ளார். மேலும், தமிழ் என்ற பெயருக்கு விரிவான விளக்க உரையும் எழுதியுள்ளார்.

தமிழ் நூல்களை பதிப்பித்ததன் மூலமும், மொழியை எளிமையாக்கி எல்லோருக்கும் கொண்டு செல்ல முயன்றதாலும் சில நூல்களுக்கு உரை

எழுதியதாலும் அவருடைய தமிழ்த் தொண்டு என்றென்றும் நினைக்கப்படும்.

**சாத்திரக் குப்பை**

சாதி, சமயங்களை சாடுவதில், வள்ளலார் எவரும் நினைத்துப் பார்க்க முடியாத எல்லைகளை தொட்டிருக்கிறார். இவருக்கு முன்னோடியாக சித்தர்களின் குரல் தமிழகத்தில் ஒலித்திருக்கிறது. பக்தி இயக்க காலத்தில் புத்த, சமண மதங்கள் கடுமையாக ஒடுக்கப்பட்டன. பேரரசுகள் இதற்கு துணை நின்றன. சாதி, வர்ண, ஆசிரம முறைக்கு எதிராக சித்தர்களின் பாடல்கள் வெடித்தெழுந்தன.

‘சாதிப்பிரிவினிலே தீயை மூட்டுவோம்’ என்று பற்ற வைத்தார் பாம்பாட்டி சித்தர். தாவாரம் இல்லை, தனக்கொரு வீடில்லை, தேவாரம் ஏதுக்கடி, குதம்பாய்-தேவாரம் ஏதுக்கடி?’ என்றார் குதம்பைச் சித்தர்.

துவக்கத்தில் தன்னை ஒரு பக்திப் பாடகராகவே பாவித்துக் கொண்ட வள்ளலார் பலநூறு பாடல்களை கோவில்கள் தோறும் சென்று பாடினார். ஆனால், ஆறாம் திருமுறையில் அவர் எழுதியுள்ள பாடல்கள் வெடிகுண்டுகளைப் போல வைதீக உலகை தாக்கின.

‘வேதாக மங்களென்று
வீண்வாதம் ஆடுகின்றீர்
வேதாக மத்தின்
விளைவறியீர் - சூதாகச்
சொன்னவலால் உண்மைவெளி
தோன்ற உரைக்கவில்லை
என்ன பயனோ
இவை’

என்று பாடிய வள்ளலார், ‘சாதியும் மதமும் சமயமும் தவிர்த்தேன், சாத்திரக் குப்பையும் தணந்தேன்’ என்று விலகி நிற்கிறார். ‘அறிவே திருவே அறிவே செறிவே அதுவே இதுவே அடியே முடியே அந்தோ வந்துஆள் எந்தாய் எந்தாய் அம்பல நம்பதியே’ என்று பாடிக் கொண்டிருந்தால் வைதீகர்களுக்கும் வள்ளலாருக்கும் மோதல் வந்திருக்கப் போவதில்லை. ஆனால் இவரோ அத்தனையையும் கொட்டிக் கவிழ்த்தார். அத்தனையும் பிள்ளை விளையாட்டு என்றார்.

அவரது இறுதிக் காலத்தில் கூறப்பட்டு பேருபதேசம் என்ற பெயரில் தொகுக்கப்பட்டுள்ள உரையில், ‘சைவம், வைணவம் முதலிய சமயங்களிலும்

வேதாந்தம் சித்தாந்தம் முதலிய மதங்களிலும் லட்சியம் வைக்க வேண்டாம். அவற்றில் தெய்வத்தைப் பற்றி குழூஉக் குறியாக குறித்திருக்கிறதேயன்றி புறங்கவியச் சொல்லவில்லை. நான் முதலில் சைவ சமயத்தில் லட்சியம் வைத்துக் கொண்டிருந்தது இவ்வளவு என்று அளவு சொல்ல முடியாது. அந்த லட்சியம் இப்போது எப்படி போய்விட்டது பார்த்தீர்களா? ஏன் அவ்வளவு மிகுந்த அழுத்தம் அப்போது இருந்தது என்றால், அப்போது எனக்கு அவ்வளவு கொஞ்சம் அற்ப அறிவாக இருந்தது' என்கிறார்.

இது வள்ளலார் சொன்னதே அல்ல, என்று சொல்லிப் பார்த்தார்கள். அது நிரூபிக்கப்பட்ட நிலையில், வள்ளலாருக்கு எதிராக கடுமையான அவதூறுகளை வைதீகர்கள் கிளப்பிவிட்டனர். ஒரு பெரும்படையே புறப்பட்டு அவருக்கு எதிராக செயல்பட்டது. அன்றைய தஞ்சை, தென்னாற்காடு மாவட்டங்களில் பெரும் நிலங்களை குவித்து வைத்திருந்த சைவ மடங்கள் வள்ளலாருக்கு எதிரான செயல்களுக்கு பின்னணியாக இருந்தன.

## அருட்பா – மருட்பா

வள்ளலார் தன்னுடைய பாடல்களை தொகுத்து வெளியிடுவதையே விரும்பவில்லை. அவருடைய சீடர்கள் உண்ணாவிரதம் இருப்போம் என்று கூறிய பிறகுதான் அதற்கு அவர் இசைந்தார். திருஅருட்பா என்ற பெயரை வைக்கவும் இல்லை. சீடர்கள்தான் வைத்தனர். ஆனால் வள்ளலார் முழுமையாக கிளர்ச்சிக்காரராக வெளிப்பட்ட ஆறாம் திருமுறை பாடல்கள் வெளிவருவதை அவருடைய சீடர்கள் பலரே விரும்பவில்லை. தன்னுடைய கையொப்பத்தைக் கூட சிதம்பரம் இராமலிங்கம் என்றே போட்டிருக்கிறார். ஆனால், தேவாரம், திருவாசகம் மட்டும்தான், அருட்பா; இராமலிங்கரின் பாட்டு வெறும் மருட்பா என்று அவர் இருந்தபோதும், அவருடைய மறைவுக்குப் பிறகும் பெரும் விவாதங்கள், வழக்குகள் நடந்தன. அவர் மறைவுக்குப் பிறகு நடந்த அருட்பா, மருட்பா விவாதத்தில் பெரும் புலவரான சதாவதானி செய்குத் தம்பி பாவலர் பல இடங்களுக்குச் சென்று இது அருட்பாதான் என்று வாதிட்டுள்ளார். இவர், ஒரு இஸ்லாமியர் என்பது கருத்தில் கொள்ள வேண்டியது.

வள்ளலார் பல அமைப்புகளை உருவாக்கியுள்ளார். இந்த செயல்பாட்டின் காரணமாகவே சீர்திருத்த மரபில் அவர் தனித்து கவனிக்கப்பட்டவராக இருக்கிறார். 1865 ல் சமரச வேத சன்மார்க்க சங்கத்தை அவர் உருவாக்கினார். இதில் உள்ள வேதம் என்ற சொல் யசூர், சாம, அதர்வண வேதங்களை நினைவுபடுத்தும் என்பதால் பின்னர் தனது சங்கத்தின் பெயரை 1872 இல் சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம் என்று மாற்றினார். தாம் கூறும் சமரச வேதம் சமயம் கடந்தது. சமயாதீனமானது. எல்லாச் சமயத்தார்க்கும் பொதுவானது என்று விளக்குகிறார். சங்கத்தை

உருவாக்குவதற்கு முன்பே பசிப் பிணி அகற்ற அன்ன சாலையை 1867லிலேயே அவர் உருவாக்கியிருந்தார். அந்த சபை சமரச சுத்த சன்மார்க்க சத்திய தர்மசாலை என்று அழைக்கப்பட வேண்டும் என்று வள்ளலார் கூறியுள்ளார். அவர் உருவாக்கிய சத்திய தர்மசாலை இன்றளவும் செயல்பட்டு வருகிறது. அவர் மூட்டிய அணையா அடுப்பு இன்றளவும் எரிந்து வருகிறது.
சமரச சுத்த சன்மார்க்க சங்கம், சத்திய தருமச் சாலை, சத்திய ஞானச் சபை மற்றும் சித்தி விளாகம் என்ற நான்கு அமைப்புகளை வள்ளலார் உருவாக்கினார். முதல் மூன்றும் வடலூரிலும், சித்தி விளாகம் மேட்டுக்குப்பத்திலும் அமைந்தன.

புத்தரால் தோற்றுவிக்கப்பட்ட பௌத்த சங்கத்திற்கு பிறகு சமயத்திற்கு என்று உருவாக்கப்பட்ட சங்கம், சமரச சுத்த சன்மார்க்க சங்கமே ஆகும். வள்ளலார் துறவு வாழ்க்கையை மேற்கொண்டிருந்த போதும், சைவ மடங்களை தேடிச் சென்று மடாதிபதிகளால் தீட்சை பெற்றுக் கொண்டவர் அல்ல. காவி உடையை மறுத்து வெள்ளாடை மட்டுமே அணிந்தார். சைவர்கள் சைவ சாத்திரங்களைத் தவிர பிற தமிழ் இலக்கியங்களை கற்கக் கூடாது என்று சைவ மடங்கள் கட்டுப்பாடு விதித்திருந்த நிலையில், திருக்குறளையும் மக்களுக்கு கற்பித்தார்.

அவர் உருவாக்கிய வழிபாட்டுத் தலத்தில் விக்கிரகம் எதுவும் இருக்கக் கூடாது என்றும் ஜோதி வழிபாடு மட்டுமே இருக்க வேண்டும் என்றும், அந்த விளக்குக் கூட தகரத்தினால் அமைக்கப்பட வேண்டும் என்றும் நிரந்தரமான பூசாரி யாரும் இருக்கக் கூடாது என்றும், வயதில் மிக இளையவர் அல்லது முதியவர் அன்றன்று ஜோதியை ஏற்ற வேண்டும் என்றும் வள்ளலார் வகுத்திருந்தார். அவர் காலத்திலேயே, சபையில் லிங்கம் வைத்து, விபூதி கொடுத்து சிலர் அதை ஒரு கோவில் போல உருவாக்க முயன்ற நிலையில், சபையினை பூட்டி சாவியை எடுத்துச் சென்றுவிட்டார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

**மத்திற்கும் வன்முறைக்கும் இடமில்லை**

வடலூரில் சத்திய ஞான சபையை இந்து சமய அறநிலையத்துறை பின்னாளில் ஏற்றுக் கொண்டது. அங்கு ஜோதி வழிபாடு மட்டுமே நடத்தப்பட்டு வந்தது. இதை எதிர்த்து தொடரப்பட்ட வழக்கில் நீதியரசர் சந்துரு வழங்கிய தீர்ப்பு வள்ளலாரை புரிந்து கொள்ள உதவும். வள்ளலார் எழுதிய பாடல்களை படிக்கும்போது சிலை வழிபாட்டை அவர் நிராகரித்துள்ளார். ஜோதி வழிபாடு குறித்து கூறியுள்ளார். இங்கு மதத்துக்கு இடமில்லை. மனிதகுலத்துக்குத்தான் இடம் உள்ளது என்று கூறியுள்ளார்.

வன்முறைக்கு இடமில்லை என்று ஜீவகாருண்யத்தை குறிப்பிட்டுள்ளார். சைவம், வைணவம், சித்தாந்தம், வேதாந்தம் இவற்றில் தன்னுடைய சீடர்கள் நம்பிக்கை வைக்கக் கூடாது என்பதே வள்ளலார் கருத்து என்றும் அவர் சுட்டிக் காட்டியுள்ளார்.
பெண்கல்வி மறுக்கப்பட்டிருந்த அன்றைய சூழலில், ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒத்த கல்வி வழங்கப்பட வேண்டும் என்று வலியுறுத்தினார். ஆண்களும் பெண்களும் ஒரே இடத்தில் தங்கி படிப்பது சமண சமய வழக்கமாகும். இதை மீண்டும் கொண்டு வர வள்ளலார் முயன்றார். பெண்களுக்கு தொழில் கல்வியும், ஆன்மீகக் கல்வியும், யோகம், தியானம் உள்ளிட்ட பயிற்சிகளும் கற்பிக்கப்பட வேண்டும் என்றார். சன்மார்க்க நெறியில் பெண்களும் ஈடுபடும் உரிமை உண்டு என்றார்.
கணவன் இறந்த பின்பு, பெண்களுக்கு தாலி வாங்க வேண்டா என்று கூறுவதன் மூலம் பெண்கள் விதவை கோலம் பூணுவதை தடுத்தார். இதன் மூலம் விதவை திருமணத்தை அவர் ஆதரித்தார் என்று கருத இடம் உண்டு.

தமிழ்நாட்டில் முதன்முதலாக முதியோர் கல்வியை உருவாக்கியவரும் அவரே ஆவார். தாம் உருவாக்கிய பாடசாலையில் தமிழ், வடமொழி, ஆங்கிலம் என மூன்று மொழிகள் கற்பிக்கப்பட வேண்டும் என்றார்.

புத்த மதத்தில் நாகார்ஜுனர் என்பவர் உள் நுழைந்து மகாயானம் என்ற பிரிவை உருவாக்கி இந்து மதத்தின் சாயலில் புத்த மதத்தை உருமாற்றம் செய்தது போல, வள்ளலாரிடம் சீடராக வந்து சேர்ந்த உமாபதி சிவாச்சாரியார் என்பவர் துவக்கத்தில், வள்ளலார் வழி நிற்பவர் போல காட்டிக் கொண்டு, வள்ளலார் மறைவுக்குப் பிறகு வள்ளலார் உருவாக்கிய வழிபாட்டுத் தலத்தை, லிங்கத்தை வைத்து வழக்கமான சிவாலயமாகவே மாற்றிவிட்டார். பூசாரித்தனமும் வசூலும் நடந்தன. மீண்டும் ஜோதி வழிபாட்டை நடத்த பெரும் போராட்டம் நடந்துள்ளது.
வள்ளலார் ஜீவகாருண்யம் என்ற பெயரில் மாமிச உணவு மறுப்பை கடுமையாக வலியுறுத்தியுள்ளார். இதனால் விளிம்பு நிலை மக்கள் அவருடைய இயக்கத்தினால் அதிகமாக ஈர்க்கப்படாமல் போயிருக்கலாம். அவருடைய சமூக சீர்திருத்த கருத்துக்கள் அவருடைய சீடர்களாலேயே தொடர்ந்து பின்பற்றப்படவில்லை. அவரும் ஒரு வழக்கமான சாமியார் போலவே சித்தரிக்கப்பட்டுவிட்டார்.

சைவ சமயம் உட்பட அனைத்தையும் அவர் நிராகரித்த நிலையில், சைவ சமயத்தின் உட்பிரிவுகளில் ஒன்றாக அவருடைய இயக்கம் சுருக்கப்பட்டுவிட்டது. சிதம்பரம் நடராஜர் கோவிலை சீர்திருத்த அவர் விரும்பினார். ஆனால், அந்தக் கோவிலில் நந்தனாருக்கு ஏற்பட்டதுபோல

அவருக்கும் கசப்பான அவமானமே நேர்ந்தது. சிதம்பரத்திற்கு போட்டியாக வடலூர் வழிபாட்டுத் தலத்தை அவர் உருவாக்க விரும்பினார். ஆனால் அவர் காலத்திலேயே அவர் உருவாக்கிய நியதிகள் மீறப்பட்டது கண்டு 'கடை விரித்தேன் கொள்வாரில்லை' என வெதும்பினார். அவருக்கு பின்பு அவருடைய சீடர்கள் அவருடைய சீர்திருத்த மரபை முன்னெடுத்துச் செல்லவில்லை. எனினும், பின்னாளில் பாரதியார், பெரியார் போன்ற சீர்திருத்தவாதிகளின் முன்னோடியாக அவர் திகழ்ந்தார். அவருடைய சமூக, சீர்திருத்த கருத்துக்களை ஆழமாக ஆய்வு செய்து, மாயத்திரைகளை விலக்கி அவர் காண விரும்பிய சமநீதி வெளிச்சத்தில் சமூகத்தை முன்னோக்கி நகர்த்த வேண்டிய அவசியம் உள்ளது.

மதவெறி மிகத் தீவிரமாக பரப்பப்படுகின்ற நிலையில், சித்தர்கள், இராமனுஜர், வைகுண்ட சுவாமிகள், வள்ளலார், நாராயண குரு, ஜோதிபாபூலே, அய்யங்காளி போன்ற சீர்திருத்தவாதிகளின் கருத்துக்களை ஆழமாக புரிந்து கொண்டு, இந்துத்துவாவாதிகள் பேசுகிற ஆன்மீக அரசியலுக்கு மாற்றாக முற்போக்கு அம்சங்கள் கொண்ட சமய, சமூக சீர்திருத்த மரபை முன்வைக்க வேண்டிய அவசியம் உள்ளது. வள்ளலார் அன்னதான பிரபுவாக மட்டுமே குறுக்கப்பட்டுவிட்ட நிலையில், சாதி மறுப்பு, பெண்ணுரிமை, அனைவருக்கும் கல்வி, மூட நம்பிக்கை எதிர்ப்பு உள்ளிட்ட அவரது சிந்தனைகளை பரப்ப வேண்டியது அவசியம்.

மதவெறிக்கு எதிரான போர் அரசியல் தளத்தில் மட்டுமல்ல, தத்துவ தளத்திலும் நடைபெற வேண்டும். இதற்கு வள்ளலாரும் ஒரு ஆயுதமாக இருப்பார்.

## தாராள வாதத்தை எதிர்த்துப் போராடுக

**மா சே துங்**

*மா சே துங் 1930ஆம் ஆண்டுகளில் சீன கம்யூனிஸ்ட் கட்சியை புரட்சிகரமாகக் கட்டுவதில் முனைப்புடன் செயல்பட்டு வந்தார். அந்நிலையில் பல தவறான போக்குகள் கட்சியில் தலைதூக்குகிற சூழல் உருவானது. எதிர்த்துப் போரட வேண்டிய பல சித்தாந்த கருத்துக்களுடன் பலர் சமரசம் செய்து கொள்ளும் போக்கும் நிலவியது. இதனையே 'தாராளவாதம்' என மாவோ குறிப்பிடுகிறார். அதன் வெளிப்பாடுகளை பட்டியலிட்டு இந்தக் கட்டுரையை வடிவமைத்துள்ளார். இதர முதலாளித்துவ கட்சிகளிடமிருந்து வேறுபட்டு, சோஷலிச மாற்றத்தை நோக்கிச் செல்ல வேண்டுமெனில் தாராளவாத கண்ணோட்டங்களை கட்சியிலிருந்து அகற்ற வேண்டும்.*

*இதற்கு வழிகாட்டும் மிக முக்கியமான கட்டுரையாக இது விளங்குகிறது. – ஆசிரியர் குழு*

உயிரோட்டமான ஒரு தத்துவார்த்தப் போராட்டத்தை நடத்தவே நாம் விரும்புகிறோம். ஏனெனில் கட்சிக்குள்ளும், புரட்சிகர அமைப்புகளுக்கு உள்ளேயும் ஒற்றுமை நிலவுவதை உறுதிப்படுத்துவதற்கான நமது போராட்டத்திற்கும் அதன் நலன்களுக்கும் அதுவே மிகச் சிறந்த ஆயுதமாகும். ஒவ்வொரு புரட்சியாளனும், ஒவ்வொரு கம்யூனிஸ்டும் இந்த ஆயுதத்தைக் கையில் வைத்திருப்பது மிகவும் அவசியமாகும்.

ஆனால் தாராளவாதமானது தத்துவார்த்தப் போராட்டத்தை மறுதலிப்பதோடு, குறிக்கோளற்ற சமாதானத்தின் பக்கமே நிற்கிறது. இதன் விளைவாக புரட்சிகர அமைப்புகளிலும், கட்சியிலுள்ள தனிநபர்கள் இடையேயும், ஒரு சில குறிப்பிட்ட பகுதிகளிலும் வழக்கிழந்து போன, எதைப் பற்றியும் கவலைப்படாத அணுகுமுறை வலுப்பெறவும், அரசியல் ரீதியான சீரழிவைக் கொண்டுவரவும் வழியேற்படுகிறது.

இத்தகைய தாராளவாதம் பல்வேறு வழிகளில் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது.

ஒருவர் தவறான வழிக்கு நிச்சயமாகச் சென்றுவிட்டதை உணர்ந்த போதிலும் அமைதியைக் கருதியும், நட்பைக் கருதியும் விஷயங்களை அப்படியே விட்டுவிட்டு, அவர் நீண்ட கால நண்பர்; ஒரே ஊரைச் சேர்ந்தவர்; பள்ளியில் ஒன்றாகப் படித்தவர்; நெருங்கிய நண்பர்; தன் அன்பிற்கு உரியவர்; முன்னாள் சக ஊழியர்; அல்லது  முன்னாளில் தனக்குக் கீழே பணி புரிந்தவர் என்பது போன்ற காரணங்களால் கொள்கை அடிப்படையில் அவருடன் வாதம் புரிவதைத் தவிர்ப்பது; அவருடனான உறவை நீடித்துக் கொள்ளும் வகையில் அவர் தொடர்பான விஷயத்தை மேலோட்டமாகத் தொட்டுச் செல்வது; இதன் ஒட்டுமொத்த விளைவு என்னவெனில், கட்சி அமைப்பிற்கும் சம்பந்தப்பட்ட தனிநபருக்குமே இதனால் பெரிதும் ஊறு விளைகிறது. இது தாராளவாதத்தில்  ஒரு வகை.

ஒருவர் தனது கருத்தை கட்சி அமைப்பிற்கு முன்னால் தீவிரமாக எடுத்துச் செல்வதற்குப் பதிலாக பொறுப்பற்ற வகையில் தனிப்பட்ட விமர்சனங்களைச் செய்வதில் ஈடுபடுவது; முகத்திற்கு நேராக எதையும் சொல்வதற்குப் பதிலாக அவர்களது முதுகிற்குப் பின்னால் அவரைப் பற்றி புரளி பேசுவது; அல்லது கூட்டத்தில் எந்தக் கருத்தையும் எடுத்து வைக்காமல் கூட்டம் முடிந்தபிறகு புரளி பேசுவது; கூட்டு வாழ்க்கை என்ற குறிக்கோள்களைப் பற்றி சிறிதும்

கவலைப்படாமல் தனது விருப்பப்படியே நடந்து கொள்வது. இது இரண்டாவது வகை.

எந்தவொரு விஷயமும் தனிப்பட்ட வகையில் தன்னைப் பாதிக்காத வகையில் இருக்குமானால் அதை அப்படியே விட்டுவிடுவது; எது தவறு என்று நன்றாகத் தெரிந்திருந்தபோதிலும் அதைப் பற்றி முடிந்தவரையில் மிகக் குறைவாகப் பேசுவது; தன் மீது பழி எதுவும் வந்துவிடாத வகையில் பாதுகாப்பாக நடந்து கொள்வது. இது மூன்றாவது வகை.

உத்தரவுகளை மதிக்காமல் தனது சொந்தக் கருத்துக்களுக்கே முக்கியத்துவம் அளிப்பது; கட்சி அமைப்பில் சிறப்பான மரியாதையைக் கோரும் அதே நேரத்தில் கட்சி ஒழுங்கை பின்பற்ற மறுப்பது; இது நான்காவது வகை.

கட்சி அமைப்பின் ஒற்றுமை, முன்னேற்றம் ஆகியவற்றுக்காகவும், வேலைகளை முறையாக நிறைவேற்றவும், தவறான கருத்துகளுக்கு எதிராக வாதாடவும், போராடவும் முன்வராமல், தனிப்பட்ட தாக்குதல்களைத் தொடுப்பது, வேண்டுமென்றே சண்டை வளர்ப்பது, தனிப்பட விரோதம் பாராட்டுவது, பழி வாங்க முற்படுவது போன்ற நடவடிக்கைகளில் ஈடுபடுவது. இது ஐந்தாவது வகை.

தவறான கருத்துக்கள் கட்சிக்குள் வெளிப்படும்போது அவற்றை மறுத்துப் பேசாமல் கேட்டுக் கொண்டிருப்பது; புரட்சிக்கு எதிரான கருத்துக்கள் வெளிப்படுத்தப்படும்போது அது குறித்து கட்சிக்குத் தெரிவிக்காமல், எதுவுமே நடக்காதது போல் வெறுமனே கேட்டுக் கொண்டிருப்பது. இது ஆறாவது வகை.

மக்களுடன் பழகி, அவர்களிடையே பிரச்சாரம், கிளர்ச்சி ஆகியவற்றை வளர்த்தெடுக்க, அவர்களிடையே கூட்டங்களில் பேசுவது அல்லது ஆய்வுகளையும், விசாரணைகளையும் மேற்கொள்வது போன்ற நடவடிக்கைகளில் ஈடுபடத் தவறுவது; அதற்கு மாறாக, அவர்களைப் பொருட்படுத்தாத வகையில், அவர்களது நலன்களைப் பற்றிக் கவலைப்படாத வகையில் நடந்து கொள்வது; தான் ஒரு கம்யூனிஸ்ட் என்பதையே மறந்து விட்டு, கம்யூனிஸ்ட் அல்லாத ஒரு சாதாரண மனிதரைப் போல நடந்து கொள்வது. இது ஏழாவது வகை.

மக்களின் நலன்களுக்கு ஊறுவிளைவிக்கும் வகையில் ஒருவர் நடந்து கொள்ளும்போது, அது குறித்துக் கோபம் கொள்ளாமல், அதைத் தடுக்காமல், அவரோடு வாதாடாமல், அவரது செயல் தொடர்ந்து நடைபெற அனுமதிப்பது. இது எட்டாவது வகை.

திட்டவட்டமான வழிமுறை அல்லது திட்டம் ஏதுமின்றி அரைகுறை மனதோடு வேலை செய்வது; மேலோட்டமாக வேலை செய்வது; குழப்பத்துடனே இருப்பது; அதாவது “பூசாரியாக இருக்கும் வரையில் மணியாட்டிக் கொண்டே இருந்தால் போதும்” என்ற போக்கில் நடந்து கொள்வது. இது ஒன்பதாவது வகை.

கட்சியின் புரட்சிகர நடவடிக்கைகளில், தான் மகத்தான சேவை செய்து விட்டதாகக் கருதிக் கொள்வது; அனுபவம் மிக்கவர் என தன்னை பெருமையோடு கருதிக் கொள்வது; இதன் காரணமாக சிறிய பொறுப்புகள் எல்லாம் பெரிய கடமைகளுக்கு இணையானதல்ல என்று கசப்போடு நோக்குவது; வேலையில் போதிய கவனமின்றி ஈடுபடுவது; படிப்பதிலும் பொறுப்பின்றி இருப்பது. இது பத்தாவது வகை.

தனது சொந்தத் தவறுகளைப் பற்றி அறிந்து கொண்டவராக இருந்தபோதிலும், அவற்றைத் திருத்திக் கொள்ள எவ்வித முயற்சியையும் எடுக்காமல் இருப்பது; தன்னைப் பொறுத்தவரையில் தாராளப் போக்கைக் கடைப்பிடிப்பது. இது பதினோராவது வகை.

இதுபோல இன்னும் சொல்லிக் கொண்டே போகலாம். ஆனால் இந்த பதினோரு வகையும்தான் முக்கியமானவை ஆகும். இவை அனைத்துமே தாராள வாதத்தினை வெளிப்படுத்தும் போக்குகள்தான்.

புரட்சிகரமானதொரு கூட்டுச் செயல்பாட்டிற்கு இத்தகைய தாராளவாதப் போக்கு மிகவும் ஊறுவிளைவிப்பதாகும். அது ஒற்றுமையை விழுங்கி, ஒழுங்கமைப்பை பலவீனப்படுத்தி, அக்கறையின்மைக்கு வழிவகுத்து, கட்சி அமைப்பிற்குள் கருத்து வேற்றுமையை உருவாக்குகிறது. அது புரட்சிகர அணிகளுக்கு கட்டுக்கோப்பானதொரு அமைப்பு, கண்டிப்புடன் கூடிய ஒழுங்குமுறை ஆகியவை கிடைக்காமல் செய்து விடுகிறது. கட்சியின் கொள்கைகள் நடைமுறைப்படுத்தப்படுவதையும் இது தடுக்கிறது. கட்சி தலைமை தாங்கும் வெகுமக்களிடமிருந்து கட்சி அமைப்பினை தனிமைப்படுத்துகிறது. இது மிக மிக மோசமானதொரு போக்காகும்.

குட்டி முதலாளித்துவ சுயநலத்திலிருந்தே இத்தகைய தாராளவாதம் முகிழ்க்கிறது. இது தனிப்பட்ட நலன்களுக்கு முதலிடம் அளித்து, புரட்சியின் நலன்களை இரண்டாம் பட்சமாகவே கருதுகிறது. இதன் விளைவாக தத்துவார்த்த ரீதியான, அரசியல்ரீதியான, அமைப்புரீதியான தாராளவாதம் தலையெடுக்க வழியேற்படுகிறது.

தாராளவாதப் போக்குடையவர்கள் மார்க்சிய குறிக்கோள்களை வறட்டுத் தனமானதொரு கொள்கையாகவே பார்க்கின்றனர். அவர்கள் மார்க்சியத்தை ஏற்றுக் கொள்கின்றனர். எனினும் அவர்கள் அதனை செயல்படுத்தவோ அல்லது அதை முழுமையாக செயல்படுத்தவோ தயாராக இருப்பதில்லை. தங்களது தாராளவாதத்திற்குப் பதிலாக அந்த இடத்தில் மார்க்சியத்தை நிலைநிறுத்த அவர்கள் தயாராக இல்லை. அவர்களுக்கே உரித்தான மார்க்சியம் இவர்களிடம் இருக்கிறது. அதைப் போலவே அவர்களுக்கே உரித்தான தாராளவாதமும் இருக்கிறது. அவர்கள் மார்க்சியம் பற்றிப் பேசுவார்கள்; ஆனால் தாராளவாதப் போக்கையே கடைப்பிடிப்பார்கள். மற்றவர்களுக்கு மார்க்சியத்தைப் பொருத்திப் பார்க்க முனையும் அவர்கள் தாராள வாதத்தை தங்களிடம் வைத்துக் கொள்கிறார்கள். இந்த இரண்டையுமே இருப்பில் வைத்துக் கொள்ளும் அவர்கள் நிலைமைக்கு ஏற்ப அவை ஒவ்வொன்றையும் பயன்படுத்திக் கொள்கிறார்கள். ஒரு சிலரின் மனங்கள் இவ்வாறுதான் செயல்படுகின்றன.

தாராளவாதம் என்பது சந்தர்ப்பவாதத்தின் ஒரு வெளிப்பாடே ஆகும். அது அடிப்படையிலேயே மார்க்சியத்திற்கு முரணானதாகும். அது எதிர்மறையானது மட்டுமின்றி நமது வர்க்க எதிரிக்கு உதவி செய்யக் கூடியதாகவும் உள்ளது. எனவேதான் நம்மிடையே இந்தப் போக்கு பாதுகாப்பாக நிலவுவதை நமது எதிரிகள் வரவேற்கின்றனர். அதன் தன்மை இத்தகையதாக இருக்கும் நிலையில், புரட்சி அணிகளிடையே அதற்கு இடமே இருக்கலாகாது.

எதிர்மறையான தாராளவாதப் போக்கை வென்றெடுக்க நேர்மறை உணர்வான மார்க்சியத்தையே நாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். **ஒரு கம்யூனிஸ்ட் என்பவர் பரந்த உள்ளம் படைத்தவராக, உறுதியானவராக, செயலூக்கம் மிக்கவராக, புரட்சியின் நலன்களை தனது உயிருக்கு உயிராகக் கருதுபவராக, புரட்சியின் நலன்களுக்கு முன்னால் தனது தனிப்பட்ட நலன்களை கீழ்ப்படுத்துபவராக, எப்போதும், எல்லா இடத்திலும் குறிக்கோளுக்கு கீழ்ப்படிபவராக, தவறான கருத்துக்கள், நடவடிக்கைகள், செயல்கள் ஆகிய அனைத்திற்கும் எதிராக சலியாத போராட்டத்தை நடத்துபவராக இருக்க வேண்டும்.** இவற்றின் மூலமே கட்சியின் கூட்டு வாழ்க்கையை நிலைநிறுத்தவும், மக்களுக்கும் கட்சிக்கும் இடையிலான உறவுகளை வலுப்படுத்தவும் இயலும். தனிப்பட்ட எந்தவொரு நபரைப் பற்றியும் கவலைப்படாமல் கட்சியைப் பற்றியும் மக்களைப் பற்றியுமே கவலைப்படுபவராக, தன்னைவிட மற்றவர்களைப் பற்றியே அதிக அக்கறை கொண்டவராக அவர் விளங்க வேண்டும். அவ்வாறு இருந்தால் மட்டுமே அவரை நாம் ஒரு கம்யூனிஸ்ட் என்று கருத முடியும்.

நம்மிடையே ஒரு சிலர் வெளிப்படுத்தும் இத்தகைய தாராளவாதப் போக்குகளை எதிர்த்துப் போராடவும், அவர்களை சரியான பாதைக்கு திரும்பக் கொண்டுவரவும், நேர்மையான, செயலூக்கமிக்க, அர்ப்பணிப்புமிக்க கம்யூனிஸ்டுகள் அனைவரும் ஒன்றிணைவது அவசியமாகும். நமது தத்துவார்த்த அணியின் முன்னால் உள்ள கடமைகளில் இதுவும் ஒன்றாகும்.

*(1937 செப்டெம்பர் 7 அன்று நடைபெற்ற கட்சி வகுப்பில் மா சே துங் ஆற்றிய உரையின் தமிழாக்கம்)*

தமிழில்: வீ. பா. கணேசன்

**பி. எஸ். கிருஷ்ணன்:** சமூக நீதிக்கானக்கான குரல்

**சு. லெனின் சுந்தர்**

ஓய்வு பெற்ற அதிகாரிகள் தங்கள் பணிக்கால அனுபவங்களை புத்தகமாக எழுதுவது புதிதல்ல. எனினும் பி. எஸ். கிருஷ்ணன் அவர்கள் முனைவர். வசந்தி தேவி அவர்களுடன் உரையாடி கேள்வி பதிலாக வந்திருக்கும் “சமூக நீதிக்கான அறப்போர்” என்ற புத்தகம் வேறு வகை.

கேரளத்தை பூர்விகமாக கொண்டு, ஆந்திராவில் பெரும் காலமும் மைய அரசு பணியில் சில ஆண்டுகளும் என 1956 முதல் 1991 வரை பணியில் இருந்த திரு. பி எஸ் கிருஷ்ணன் அவர்களுடைய அனுபவம் அதிகார மையத்தை நோக்கி வினா எழுப்பியதாகும். பிறப்பால் உயர் குடியில் பிறந்தாலும் பட்டியலின, பழங்குடி, மிகப் பிற்படுத்தப்பட்டோர் வாழ்வுரிமை உயர்ந்திட அவரது பணி அமைந்திருந்ததை இப்புத்தகம் வெளிக்கொணர்கிறது.

பல ஆயிரம் ஆண்டுகளாக நீடித்திடும் சாதிய சமூக அமைப்பு முறையும், அதன் வழிபட்ட சுரண்டலால் தாழ்நிலைக்கு சென்ற பட்டியலின, பழங்குடி மற்றும் மிகப் பிற்படுத்தப்பட்டோர் வாழ்நிலை என விரிந்து செல்லும் பின்புலத்தில் சமூக நீதி நடவடிக்கைக்கான செயல் திட்டம் ஒன்றையும் திரு. பி எஸ். கிருஷ்ணன் முன் மொழிகிறார்.

அழகாக அமைக்கப்பட்ட 41 கேள்விகளுக்கு அவர் அளித்துள்ள பதில் விளக்கங்கள் அரசியல் களத்தில் எளிய மக்களோடு நிற்போர் அவசியம் புரிந்து கொள்ள வேண்டியது. SC/ ST வன்கொடுமை சட்டம் 1989இல் உருவானதிலும், அதனை அரசியல் சாசன திருத்தம் மூலம் 1990ஆம்

ஆண்டு அதற்கு அரசியல் சாசன அந்தஸ்தை உருவாக்கிக் கொடுத்ததும் அவரது பங்களிப்பாகும்.

1990-91இல் மண்டல் கமிஷன் பரிந்துரை அமல் செய்ய மறைந்த வி பி சிங் அரசுக்கு உதவியது... அது உச்ச நீதி மன்றத்தில் வழக்கானபோது இரவு பகல் பாராது பணியாற்றியது.... வி பி சிங் அவர்களது பாராளுமன்ற உரையினை தயாரித்து கொடுத்தது...(பொதுவாக அதிகாரிகள் இத்தகைய பணிகளையும் செய்வதுண்டு) என பிரமிப்பை தரும் அவர் பணிகள்...1993-ல் மனிதர்களே மனிதக்கழிவுகளை அகற்றும் நிலை ஒழிப்பு மற்றும் உலர் கழிவறை தடுப்பு சட்டத்தை உருவாக்கியதில் திரு. பி எஸ் கிருஷ்ணன் அவர்களின் பங்கு..

1996ல் SC/ ST/ MBC சமூக நீதிக்கான தேசிய குழு மூலம் அன்று அமைந்த ஐ மு கூட்டணி அரசின் ஒருங்கிணைப்பு குழு தலைவர்கள் சீதாராம் யெச்சூரி, டி. ராஜா, ஜெயராம் ரமேஷ் ஆகியோரை சந்தித்து பேசியதை நினைவு கூறுகிறார். அப்போது அவரது ஆலோசனை முழுவதும் குறைந்தபட்ச செயல் திட்டத்தில் ஏற்று கொள்ளப்பட்டது குறித்தும் குறிப்பிடுகிறார்.

**ஆக்கப்பூர்வமான பணிகள்**

மலம் அள்ளும் கொடுமையில் இருந்து ஒடுக்கப்பட்டோரை மீட்டு, அவர்களுக்கு மாற்று பணியாக ரயில்வே கேன்டீன் சர்வர் பணி, பால் விநியோகம் என முன் மொழிகிறார். கிராம கர்ணம் பணிக்கு தலித் ஒருவரை 1950களின் இறுதியில் நியமித்ததை பெருமையுடன் சொல்கிறார். இவை அன்றைய சமூக கட்டத்தில், புரட்சிகர செயலாக பார்க்கப்பட வேண்டியதும் கூட.

பட்டியலின, பழங்குடி மக்கள் மட்டுமின்றி, மீனவர், இதர பிற்படுத்தப்பட்டவர் நலன் குறித்தும் பல முன்மொழிவுகளைச் செய்துள்ளார். பிற்படுத்தப்பட்டவர் நலன் மேம்பட கல்வி, மேற்கல்வி, பணி வாய்ப்பு உள்ளிட்டவற்றில் செய்ய வேண்டியதாக அவர் முன் மொழியும் ஆலோசனைகள் பரவலாக ஏற்புடையதே. குறிப்பாக பாரம்பரிய கைத்தொழில் செய்வோர், மீன் பிடி தொழில் செய்திடும் மக்கள் என அனைத்துவகையிலும் சமூக ரீதியாக பிற்படுத்தப்பட்டவர்களுக்கு வாழ்வுரி மை, தொழில்நுட்பம், சந்தைப்படுத்த உதவி, நிதி உதவி என முன்வைக்கிறார். கல் குவாரியில் அவர்களே அதனை நடத்தும் வண்ணம் கிரஷர் எந்திரங்கள், லாரிகள், பெண் தொழிலாளர்களுக்கென பிரத்தியேக வசதி, குழந்தை காப்பகம் என்பது சமூக உரிமைகளின் பகுதியே. இவை சமூக ஏற்றத் தாழ்வை விரட்டி,

பொருளாதார முன்னேற்றத்திற்கும், சுய முன்னேற்றத்திற்குமான உழைப்பு முறை குறித்த வழிகாட்டுதல்கள் ஆகும்.

நிலம், அதன் மீதான உரிமை பட்டியலின, பழங்குடி மக்களிடம் இருப்பது பற்றி அவர் தன் காலம் முழுவதும் முயன்று இருப்பது சிறந்த பின்பற்றுதலுக்கு உரியதாகும். நில உரிமை தொடர்பாக பல பணிகள் செய்துள்ள பி எஸ் கிருஷ்ணன் அவர்கள் மனைப்பட்டா உள்ளிட்ட அம்சங்களில் ஆந்திர கம்யூனிஸ்ட் இயக்கம் மற்றும் மேற்கு வங்க கம்யூனிஸ்ட் இடதுசாரி அரசு குறித்தும் நேர்மறையான கருத்துக்களை சொல்லியுள்ளார்.

மறைந்த கே ஆர் நாராயணன் அவர்கள் குடியரசு தலைவராக இருந்தபோது 2008இல் அமைக்கப்பட்ட ஆளுநர்கள் கமிட்டி நாடு முழுவதும் இருந்த நிலம் குறித்து ஆய்வு செய்ததை நினைவு கூறுகிறார் .அன்றைக்கு மகாராஷ்ட்ர மாநில ஆளுநராக இருந்த திரு. பி சி அலெக்சாண்டர் தலைமையில் அமைந்த இக்குழு நிலமற்றோர் அனைவரும் பயன் பெறும் வண்ணம் போதுமான நிலம் நாட்டில் இருப்பதாக சொன்னது. அதை உறுதி செய்யும் வகையில் 2011-ல் அமைந்த திரு. பி எஸ். கிருஷ்ணன் தலைமையிலான குழு பூதான நிலங்கள் உட்பட ஆய்வு செய்து அறிக்கை தந்தது.

## இடதுசாரி அரசுகளின் செயல்பாடுகள்

"இடதுசாரிகளின் சாதி, தீண்டாமை பிரச்சனை அணுகுமுறை" குறித்த 28 வது கேள்விக்கு (பக்கம் 343/344/345) சாதிய ஒடுக்குமுறை குறித்து இடதுசாரிகளுக்கு புரிதல் இல்லை என சொல்கிறார். இவை போன்ற விமர்சனங்கள் இடதுசாரிகள் மீது வைக்கப்படுவது ஏற்புடையதாக இல்லை. ஏனெனில் சமூக ஒடுக்குமுறைகளைஇடதுசாரிகள் எதிர்த்த அளவிற்கு வேறு யாரும் எதிர்த்துப் போராடவில்லை என்கிற உண்மையும், அது தனது வர்க்கப் போராட்டத்தின் ஒரு பகுதிஎன்று கம்யூனிஸ்டுகள், குறிப்பாக மார்க்சிஸ்டுகள் தமது திட்டத்திலேயே முன்வைத்துள்ளனர்.

"சாதிய ஒடுக்குமுறைக்கு முடிவு கட்டுவதில், முதலாளித்துவ - நிலப்பிரபுத்துவ முறை தோல்வி கண்டுள்ளது. இதனால் தலித் மக்கள் மிக மோசமான பாதிப்பிற்கு ஆளாகியுள்ளனர். தலித் மக்கள் தீண்டாமை மற்றும் இதர அடக்குமுறைகளுக்கு உள்ளாக்கப்படுகின்றனர்" என மார்க்சிஸ்ட் கட்சி திட்டம் (பாரா 5:10)

"தலித் மக்களில் மிகப் பெரும் பகுதியினர் உழைக்கும் வர்க்கத்தின் பகுதியாக உள்ள நிலையில், சாதிய முறைக்கும், தலித் மக்கள் மீதான ஒடுக்குமுறைக்கும் எதிரான ஒற்றுமை என்பது உழைக்கும் மக்களின் ஒற்றுமையே ஆகும். சமூக சீர்திருத்த இயக்கங்கள் மூலம் சாதிய முறை

மற்றும் அதன் அனைத்து வடிவத்திலான சமூக ஒடுக்குமுறையை எதிர்த்து போராட வேண்டியது ஜனநாயகப் புரட்சியின் முக்கியமான பகுதியாகும். சாதிய ஒடுக்குமுறைக்கு எதிரான போராட்டம் என்பது வர்க்க சுரண்டலுக்கு எதிரான போராட்டத்துடன் பின்னிப் பிணைந்த ஒன்றாகும்". மார்க்சிஸ்ட் கட்சி திட்டம் (பாரா 5:12)

சுதந்திரப் போராட்ட காலத்தில் இருந்தே எளிய மக்களை திரட்டும் நிகழ்ச்சி நிரலில் சாதி ஒடுக்குமுறை குறித்த புரிதலோடுதான் கம்யூனிஸ்டுகள் செயல்பட்டுள்ளனர். 1932-33 ஆண்டுகளில் ஒடுக்கப்பட்ட மக்களை குருவாயூர் கோயிலில் ஆலய பிரவேசம் செய்விக்க போராடி தாக்குதலுக்கு ஆளானவர்கள் கிருஷ்ண பிள்ளையும் ஏ கே கோபாலனும், தமிழகத்தின் வெண்மணி வரை ஏராளமானவற்றை நம்மால் சுட்டிக் காட்ட இயலும்.

மேற்கு வங்கம், கேரளாவில் நில சீர்திருத்தங்கள் மூலம் பட்டியலின, பழங்குடி மக்களுக்கு நிலங்கள் சென்றடைய வேண்டும் என்பிதை இலக்காக கொண்டே செயல்படுத்தப்பட்டது. . மேற்கு வங்கத்தில் 1977இல் அமைந்த தோழர். ஜோதிபாசு தலைமையிலான இடது முன்னணி அரசு மக்கள் தொகையில் 23 சதம் உள்ள பட்டியல் பழங்குடி மக்களுக்கு 56% சதவீத நிலங்களை விநியோகித்தது. அதாவது, மொத்தம் அடையாளம் காணப்பட்ட 27 லட்சம் ஏக்கர் நிலத்தில், பத்து லட்சத்து எழுபதாயிரம் ஏக்கரை அரசு கையகப்படுத்தி நேரடியாக 26 லட்சத்து 44,000 பேருக்குத் தந்தது. இதில் 14 லட்சத்து எண்பதாயிரத்து அறுநூற்று நாற்பது பேர் பட்டியலின, பழங்குடி மக்கள். இது தவிர, குத்தகைதாரர் நில பகிர்வில் பதினோரு லட்சத்து எட்டாயிரம் ஏக்கர் நிலம் 5,44,000 பேருக்கு பிரித்துத் தரப்பட்டது. இதில் 42% அதாவது நான்கு லட்சத்து முப்பத்தி இரண்டாயிரம் ஏக்கர் நிலம் பட்டியலின, பழங்குடி மக்களுக்கு தரப்பட்டது.

இடதுசாரிகள் ஆட்சியின் போதுதான் பஞ்சாயத்து பொறுப்புகளில் முறையான இட ஒதுக்கீடு முறையை அமலாக்கியதோடு பொது பிரிவிலும் பட்டியலின மக்களுக்கு வாய்ப்பு தரப்பட்டது. நாட்டிற்கே முன் உதாரணமாக அரசியல் அதிகாரம் பட்டியல், பழங்குடி மற்றும் பெண்களுக்கு என அதிகாரப் பகிர்வில் நியாயம் வழங்கப்பட்டது.

இவை இடதுசரிகள் ஆட்சிப்பொறுப்பில் இல்லாத இடங்களில் போதுமான அளவு நடைபெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. சமூக நீதிக்கான போராட்டங்களும், சமூகநீதிக்கான முழக்கங்களும் ஆட்சி அதிகாரத்தை கைப்பற்றுவதில் பங்கு வகித்திருந்த போதும், மேற்படி அதிகாரம் சமூகநீதியை அவரவர் சமூகத்துடன் சுருக்கிக் கொள்ளும் ஆளும் வர்க்க சிந்தனையையே வெளிப்படுத்தி இருக்கிறது. இந்த பின்னணியில் சமூக

ஒடுக்குமுறைக்கு எதிரான போராட்டம், வர்க்க போராட்டத்துடன் இணைந்த ஒன்று  என்று மார்க்சிஸ்ட் கட்சி முன்வைக்கும் முழக்கம குறிப்பிடத்தக்கது.

மேற்கண்ட சில விமர்சனங்களை உள்ளடக்கிதாக "சமூகநீதிக்கான அறப்போர்" என்கிற இந்நூல் இருந்தாலும் சமூக நீதிக்கான போராட்டங்களை மேலும் முன்னெடுக்க இந்நூல் பயன்படும் என்பதில் ஐயமில்லை .

## அதிகார வர்க்கத்தில் ஒரு கலகக்காரர்

- எஸ்.ஜி. ரமேஷ்பாபு

"வேகமான பொருளாதார வளர்ச்சியை இந்தியா அடைவதற்கு சாதிகளற்ற சமத்துவ சமுதாயத்தை ஆட்சியாளர்கள் உருவாக்க வேண்டும். தலித், பழங்குடி, பிற்படுத்தப்பட்ட சமூகங்களோடு ஆட்சியாளர்கள் ஒத்துழைக்க வேண்டுமெனவும் அந்த வளர்ச்சியில் நல்லிணக்கம் ஏற்பட்டு சமூகமும் தேசமும் ஒருங்கிணையும் என்பதை சொல்ல வேண்டும்." (பக். 361)

பி.எஸ்.கிருஷ்ணன். போகிற போக்கில் கருத்துச் சொல்லி சொல்பவரோ, அல்லது கள யதார்த்தம் புரியாமல் அந்தரத்தில்  நின்று அறிவுரை வழங்கும் மனிதரோ அல்லை . இந்திய சமூக ஏற்றத்தாழ்வுகளின் பின்புலத்தில், அரசியல் அற உணர்வோடு தனது வாழ்வில் எற்றுக் கொண்ட பணியில் சமரசமற்ற போராளியாக வாழ்ந்த ஒரு மனிதர்.

"நான் எந்த அரசியல் கட்சியையும் சாராதவன். மற்ற எல்லாப் பிரச்சனைகளையும் நான் பார்க்கிற முறையிலேயே அரசியல் கட்சிகளையும் பார்க்கிறேன். அதாவது தலித், பழங்குடிகள், பொதுவாக பிற்படுத்தப்பட்ட பிரிவினரில் குறிப்பாக நலிந்த சாதிகள், நிலம் சொந்தமாக வைத்திருக்காத சாதிகள் ஆகியவற்றிற்கு சாதகமான சார்பு நிலையிலிருந்தே நான் அரசியல் கட்சிகளை பார்க்கிறேன். (பக் 380) இந்த சார்பு நிலை அவர் வாழ்வின் எல்லா நிலைகளிலும் அவருடன் பயணித்தது.

### அர்ப்பணிப்பு நிறைந்த ஆளுமை

பி.எஸ்.கிருஷ்ணன் அவர்களுடன் முனைவர் வே. வசந்திதேவி அவர்கள் நடத்திய உரையாடலாக சவுத் விஷன் புக்ஸ் வெளியிட்டிருக்கும்  "சமூக நீதிக்கான அறப்போர்- நலிந்தோர் நலனுக்காக ஓர் வாழ்வின் அர்ப்பணம்" என்ற நூலில் மேற்கண்ட மேற்கோள்களே அவர் யார் ? அவரது அரசியல் என்ன? எனப் புரிந்துகொள்ள போதுமானது. கடந்த நூற்றாண்டின்  இந்திய

சமூகநீதி வரலாற்றை எழுதும் யாரும் இவரை புறக்கணித்துவிட்டு எழுத முடியாத அளவுக்கு இவரது பணி அமைந்துள்ளது.

பொருளாதார சுரண்டலுக்கும், சகல விதமான சமூக சுரண்டலுக்கும் உள்ளான வர்க்கங்கள் புரட்சிகர உணர்வு பெற்று,புரட்சியின் மூலம் சோஷலிச மாற்றத்தை கொண்டு வரும்போதுதான் உண்மையான விடுதலை சாத்தியமாகும் என்பது மார்க்சிஸ்ட்டுகளின் பார்வை.இந்திய சாதிய அமைப்பின் பின்னணியில் வர்க்கங்களை எப்படி புரிந்து கொள்வது? உடமையற்ற நிலையில் உழைப்பு சக்தியை விற்று மட்டும் வாழும், தொழிலாளர் எல்லோரையும் சரிசமமான தட்டில் நிறுத்திப் பார்க்க முடியாத இந்திய சமூகத்தின் சவாலான பிரச்னையை பி.எஸ். கிருஷ்ணனின் பேசுகிறார். சமூக அங்கீகாரம் மறுக்கப்பட்ட நிலையில் சமூக அங்கீகாரத்திற்கான போராட்டம், ஓயாத ஒன்றாக, நீடிக்கிறது. உடைமையற்ற, உழைப்பு சக்தியை விற்று வாழ்க்கை நடத்துவோர் என்ற வர்க்க ஒற்றுமை உருவாவது, மேற்குறிப்பிட்ட அங்கீகரிப்பு போராட்டத்துடன் இணைந்ததாகவே இருக்க முடியும்.

கேரளாவில் உயர் சாதி குடும்பத்தில் பிறந்தாலும், இந்திய சமூகத்தின் அடித்தட்டில் உள்ள தலித் மக்கள், பழங்குடியினர், மிகவும் பிற்படுத்தப்பட்டோர் நலனுக்காக தனது வாழ்வை அர்பணித்துக்கொண்ட பி.எஸ்.கிருஷ்ணன் அவர்களுடய வாழ்வு மிகப்பெரிய படிப்பினை. 1955ஆம் ஆண்டு தேர்வு எழுதி 1956 ஆண்டு ஐ.ஏ.எஸ் அதிகாரியாக பணியில் சேர்ந்தது முதல் அவர் ஒடுக்கப்பட்டோரிடம் காட்டிய அன்பும் அவர்களுக்கு அவர் செய்த சேவைகளும்தான் அவரது உயர் அதிகாரி அவரைக் குறித்த எதிர்மறை குறிப்புகளை எழுத அடிப்படைக் காரணமானது. எனினும் அது அவரின் வளர்ச்சிக்கு தடையாக அமையவில்லை என்பதையும் புரிந்து கொள்ள வேண்டியுள்ளது.

தலித்துகள் மற்றும் பழங்குடி மக்களின் இருப்பிடம் தேடிச்சென்று அவர்களுடன் தங்கி, அவர்களுடன் உணவருந்தி, அவர்களது துன்பங்களை கற்றறிந்தது மட்டுமல்ல அவர்களுக்காக சாதி சான்றுகளையும் வீட்டுமனைப் பட்டாக்களையும் அவர்களது கிராமங்களிலேயே வழங்கியதில் துவங்கிய அவரது பணி, மண்டல் கமிஷன் அமலாக்க வரைவு உருவாக்குவதில் உச்சத்திற்கு சென்றது. ஆம் மண்டல் கமிஷன் அறிக்கையும் அதை அமலாக்கிய வி.பி.சிங் அரசை எதிர்த்து நடந்த கலவரங்களும், அத்வானியின் ரத யாத்திரையும் அவரது அரசு கலைந்த வரலாறும் எல்லோரும் அறிந்ததுதான். ஆனால் நாம் அறியாதது அந்த அறிக்கை அமலாக்கத்தின் பின்னே உள்ள வரலாறு. அதிலும் பிற்படுத்தப்பட்ட மக்கள்

முன்னேற்றத்தில் அக்கறை கொண்ட ஒரு அதிகாரியின் அர்ப்பணிப்புமிக்க பணி.

**மண்டல் கமிஷன்**

ஜனவரி 1990இல் மத்திய அரசின் நல்வாழ்வு அமைச்சகத்தின் செயலாளராக பி.எஸ். கிருஷ்ணன் பொறுப்பேற்கிறார். சமூகத்தில் பிற்படுத்தப்பட்டோருக்கான வாய்ப்புகளை ஏற்படுத்தும் மண்டல் கமிஷன் அறிக்கை மீது எழுதப்பட்ட இவரது குறிப்புகளின் அடிப்படையில்தான் அன்றைய பிரதமர் வி.பி.சிங் அரசாங்கம் மண்டல் கமிஷன் அமலாக்கம் என்ற முடிவை எடுத்தது. அரசுப் பணிகளிலும், கல்வியிலும் பிற்படுத்தப்பட்டோருக்கான இட ஒதுக்கீட்டை பாராளுமன்றத்தில் தாக்கல் செய்து வி.பி.சிங் ஆற்றிய மறக்கமுடியாத உரை இவரது தயாரிப்பு என்பது ஆச்சரியமான தகவல். பிற்படுத்தப்பட்டோருக்கான இட ஒதுக்கீட்டை எதிர்த்து நீதிமன்றங்களில் தொடுக்கப்பட்ட வழக்குகளை எதிர்த்து இவர் கொடுத்த ஆதாரபூர்வமான, வரலாற்று ரீதியான தரவுகள்தான் இன்றைக்கும் பிற்படுத்தப்பட்டோருக்கான இடஒதுக்கீடு தொடரக் காரணம் என்பது ஆர்வமூட்டும் செய்தி.

அவரது மற்றொரு சிறந்த பங்களிப்பு வன்கொடுமைத் தடுப்பு சட்டமும் அதன் திருத்த சட்ட அமலாக்கத்திலும் இருந்தது. பி.எஸ்,கிருஷ்ணன் உள்துறை அமைச்சகத்தின் தலித் மற்றும் பிற்படுத்தப்பட்டோர் வளர்ச்சி மற்றும் நல்வாழ்வுத்துறை இணைச் செயலாளராக பதவியை விருப்பத்துடன் ஏற்கிறார். இதன் விளைவாக தலித் மற்றும் பழங்குடிகள் மீதான வன்முறைகளை கண்காணித்து கொடூரமான வழக்குகளில் மாநில அரசுகளை சிறப்பு நீதிமன்றம் அமைக்க செய்து விரைவாக பாதிக்கப்பட்ட மக்களுக்கு நீதிகிடைக்க செய்தார். இந்த சூழலில்தான், ”பட்டியல் சாதியினர் பழங்குடியினர் மீதான வன்கொடுமைகள் தடுப்புச் சட்டம் - 1989” இயற்றப்பட்டது. இதன் உருவாக்கத்திலும் அதைச் சட்டமாக இயற்றுவதிலும் இவரது பங்களிப்பு முழுமையாக இருந்தது. அச்சமயத்தில் பட்டியல் சாதியினருக்கான சிறப்பு ஆணையாளராக இருந்தது இவருக்கு கூடுதலாக உதவியது. எனினும் இவரின் ஆலோசனைகள் முழுமையாக ஏற்கப்படவில்லை. உதாரணமாக, வன்கொடுமை வழக்குகளை விசாரிப்பதற்காக மாவட்ட அளவில் தனி சிறப்பு நீதிமன்றங்கள் அதில் ஒன்று. அதேபோல பல நபர்கள் சேர்ந்து பலரை கொலை செய்தல், பாலியல் வன்புணர்வுகள், ஊரை விட்டு ஒதுக்கிவைத்தல், பொருளாதார ரீதியாக ஒதுக்கி வைத்தல் உள்ளிட்ட குற்றங்களை இந்த சட்டத்தில் இணைக்க

வேண்டும் என்ற அவரது ஆலோசனைகள் இடம்பெறவில்லை. இதற்காக அவர் ஓய்ந்துவிடவில்லை.

இவரது தொடர் முயற்சியின் காரணமாக ”பட்டியல் சாதியினர் பட்டியல் பழங்குடிகள் மீதான வன்கொடுமை தடுப்புத் திருத்தச் சட்டம் - 2015” ஓரளவு முழுமை பெற்றது. பழைய சட்டத்தில் 22 குற்றங்கள்தான் வன்முறையாக வரையறுக்கப்பட்டன, ஆனால் புதிய சட்டத்தில் 37 குற்றங்களாக விரிவுபடுத்தப்பட்டது. அதாவது அவரது வாழ்வின் 26 ஆண்டுகால போராட்ட வெற்றி இது.

இவை அனைத்திற்கும், சமூகத்தில் நடந்த போராட்டங்களின் தாக்கமும் காரணம் என்பதையும் எவரும் மறுக்க முடியாது. ஒடுக்கப்பட்டோர் மீதான தாக்குதல், பெண்கள் மீது நிகழ்த்தப்பட்ட கொடுமைகள் ஆகியவற்றால் உருவான கழிவிரக்கம் காரணமாகவே இத்தகைய சட்டம் உருப்பெற்றதாகச் சொல்லப்படுகிறது. அதன் காரணமாகவே இவை சலுகைகளாக பார்க்கப்படுகின்றன. சமூக உரிமையை அடைவதற்காக இந்தியாவில் எண்ணற்ற போராட்டங்கள் நடந்துள்ளன. நிலம் என்கிற உடமையின் மூலம், உழைப்பு சக்தியை பெற்றுக் கொள்ளும் நிலப்பிரபுத்துவம், அளிக்க வேண்டிய நியாயமான கூலி, சமூக அமைப்பு முறையில் சாதி காரணமாக அடித்தளத்தில் இருப்பதை, சுரண்டலுக்கான உரிமம் என கருதுவது கூடாது என்ற கோரிக்கைகளும் போராட்டங்களும் மிகை மதிப்பீடு செய்யப்படாவிட்டாலும், குறை மதிப்பீடு செய்ய முடியாதது. அதில் கம்யூனிஸ்டுகள் முன்னெடுத்த போராட்டங்களும் அதில் களப்பலியான வெண்மணி தியாகிகளும், பழங்குடி மக்களும், சமூக இயக்கங்களின் பங்களிப்பும் நினைவு கூற வேண்டியவை.

## இஸ்லாமியர்களுக்கான இடஒதுக்கீடு

2004ஆம் ஆண்டு ஆந்திர பிரதேச அரசு ஒட்டுமொத்த முஸ்லிம் சமூகத்தையும் பிற்பட்டோராக அறிவித்து அவர்களுக்கு 5 சதவீத இடஒதுக்கீட்டையும் அறிவித்தது. ஆனால் ஆந்திர உயர்நீதிமன்றம் ”மாநில பிற்படுத்தப்பட்டோர் ஆணையத்திடம் இதுபற்றி மாநில அரசு கலந்தாலோசிக்கவில்லை. மேலும் இந்த 5 சதத்தையும் சேர்த்தால் இட ஒதுக்கீடு மொத்தத்தில் 51 சதவிகிதம் ஆகிறது. இது இடஒதுக்கீட்டிற்கு உச்சநீதி மன்றம் நிர்ணயித்த உச்சவரம்பான 50 சதவிகிதத்தை தாண்டுகிறது” என இரு காரணங்களை கூறி இந்த ஒதுக்கீட்டை இரத்து செய்தது.

இந்த நிலையில் ஆந்திரப் பிரதேச அரசு முஸ்லீம் சமூகத்தினரிடையே உள்ள சமூக அளவிலும் கல்வி ரீதியாகவும் பிற்படுத்தப்பட்ட சமூக பிரிவுகளை அடையாளம் காண்பதற்கு பி.எஸ்.கிருஷ்ணன் உதவியை நாடியது. 2007ஆம் ஆண்டு ஆந்திரப் பிரதேச அரசின் பிற்படுத்தப்பட்ட சமூக பிரிவினரின் நல்வாழ்வுக்கான சட்ட ஆலோசகராக, மாநில அரசின் கேபினட் அமைச்சர் அந்தஸ்து உடைய பதவியில் அவர் அமர்த்தபட்டார்.

ஆந்திர முஸ்லீம்கள் மத்தியில் சமூக அளவில் பிற்படுத்தப்பட்ட 13 சமூக பிரிவுகளை அடையாளம் கண்டு, (மதம் மாறினாலும் சமூக ஏற்றத்தாழ்வு இருக்கிறது) அவர்களை மாநில பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் E என்று தனிப்பிரிவை உருவாக்கி சமூக நியாயத்தைப்பெறவும், நீதிமன்ற நியாயத்தை பெற அவர்களுக்கு 4 சதவிகிதம் இடஒதுக்கீடு வழங்குமாறும் ஆலோசனை வழங்கினார். அவரது அறிக்கையின் விளைவுதான் இன்று ஆந்திராவில் இஸ்லாமிய சமூகம் 4 சதவீத இட ஒதுக்கீட்டால் பயன் பெறுகிறது.

விடுதலை இந்தியாவில் தலித்துகளுக்கும், பழங்குடியினருக்கும், துப்புரவு தொழிலாளிகளுக்கும், மதச் சிறுபான்மையினருக்கும் அவர்களது வாழ்வில் சாதகமான சில அம்சங்களேனும் இந்த அரசு செய்திருக்கும் எனில் அதில் பி.எஸ்.கிருஷ்ணன் அவர்களின் பங்களிப்பும் உள்ளது என்பதே உண்மை.

**ஆளும் வர்க்கத்திற்கான சட்டங்கள்**

இந்நூலை முன்வைத்து பல விவாதங்களை முன்னெடுக்கலாம், எனினும் எனக்கு கீழ்காணும் இரண்டு விவாதங்கள் முக்கியமாகப் படுகிறது. இது வாசிப்போரை பொறுத்து மாறலாம்.

1. பழங்குடிகள் உரிமைகளையும் நாட்டின் வளர்ச்சியையும் முரண்படுத்த தேவையில்லை. பழங்குடி மக்களின் நிலங்களை பாழ்படுத்தாமல் நவீன பொருளாதார செயல்பாட்டை முன்னுக்கு கொண்டுவரவேண்டும். பழங்குடி பகுதி மக்களுக்கு வேலைவாய்ப்பு, கல்வி வாய்ப்புகள் வழங்கப்படவேண்டும் என்ற ஆலோசனை அவர் முன்வைக்கிறார். ஆனால் இந்தியாவின் கடந்த அரை நூற்றாண்டு கால அனுபவம் அவரின் இந்த கூற்றை அல்லது ஆசையை கேள்விக்குள்ளாக்குகிறது. வளர்ச்சி என்றால் என்ன? யாருக்கான வளர்ச்சி என்ற கேள்விகளோடு இதை அணுகும்போது வனங்களில் வாழ்ந்த மக்களும் கடற்கரையோர மக்களும் பாரம்பரியமான தங்கள் நிலங்களிலிருந்து விரட்டப்பட்ட பின்பு அவர்களுக்கு எந்த வளர்ச்சியும் அங்கு இல்லை என்பதும்,

அவர்களுக்கும் அங்கு வரும் நிறுவனங்களுக்கும் எவ்வித தொடர்பும் இல்லை என்பதுமே  யதார்த்தமாய் இருக்கிறது.

2. இந்திய அரசியல் சாசன சட்டத்திற்கு உட்பட்டு குறிப்பிடத்தக்க மாறுதல்களை செய்துள்ளார் பி.எஸ்.கிருஷ்ணன். அவரது சில முயற்சிகள் மீண்டும் பின்னோக்கி தள்ளப்படலாம். உதாரணமாக பழங்குடி பள்ளிகளில் பழங்குடி மக்களே ஆசிரியர்களாக இருக்கலாம் என்பது ஆந்திரா, தெலுங்கானா மாநிலங்களில் உள்ள சட்டம். இந்த சட்டத்தை சமீபத்தில் உச்ச நீதிமன்ற ஐந்து பேர் கொண்ட constitution-bench இந்த ஒதுக்கீடு, உச்சநீதிமன்ற  இடஒதுக்கீடு வழிகாட்டுதலுக்கு எதிராக உள்ளதாகக் கூறி, அதனை தள்ளுபடி செய்துள்ளனர். இடஒதுக்கீடு பிரச்சனையைத் தாண்டி 5ஆவது அட்டவணையின் கீழ் ஆதிவாசி இன மக்களுக்குக் கிடைத்து வரும் சிறப்பு அரசியல் சாசன விதிகளின் மீது இத்தீர்ப்பு தாக்குதல் தொடுத்துள்ளது.

பாபாசாகேப் அம்பேத்கர் ஒடுக்கப்பட்ட மக்களுக்காக கொண்டுவந்த பல சீர்திருத்தங்கள், சட்ட நடவடிக்கைகள் ஆளும் வர்க்கத்தால் பலமுறை சிதைக்கப்பட்டுள்ளன. அதில் அத்திபூத்தாற்போல பி.எஸ்.கிருஷ்ணன்கள் தோன்றி சில மகத்தான பணிகளை செய்யலாம். ஆனால் இப்போதுள்ள அரசியல் சட்டம் இந்திய ஆளும் வர்க்க நலனையே முன்னிறுத்துகின்றன என்கிறபோதும் அரசியல் அமைப்பு சட்டத்தில் கிடைத்த வாய்ப்புகளையெல்லாம் தலித், பழங்குடி மற்றும் பிற்படுத்தப்பட்ட மக்கள் நலனுக்கு பயன்படுத்திய பி.எஸ்.கிருஷ்ணனை போன்ற சிறந்த மனிதர்களின் உழைப்பு மேன்மையுற வேண்டும். வளர்ச்சி என்ற பெயரில் அமலாக்கப்படும் பல திட்டங்கள்  முதலாளித்துவ மூலதன வளர்ச்சிக்கே உதவுகிறது. சமூகத்தின் பெரும்பான்மையான உழைப்பாளர்களையும், இயற்கையையும் ஏகபோகமாக்கும் பணியை செய்து வருகிறது. இந்துத்துவா ஆட்சியாளர்கள் பெரும்பான்மை மக்களுக்கு எதிராக, மூலதன ஏகபோகத்திற்கு உதவுகின்றனர் என்பதையும் கணக்கில் கொண்டு, இந்த அமைப்பு முறையை மாற்றும் பணியில் நம்மை அர்ப்பணித்துக் கொள்வதே  அடிப்படை பணியாகும்.

கல்வியாளர் வசந்திதேவி அவர்கள் அவரது வாழ்வின் சாரத்தை புரிந்துகொண்டு, அவரது வாழ்வில் எந்தெந்த முக்கிய விஷயங்களை தொகுக்க வேண்டுமோ அவற்றை மிகுந்த அக்கறையுடன் கேள்விகளாக தொகுத்துள்ளார். மிகச் சிறந்த புத்தகங்களை தமிழக அரசியல் களத்திற்கு வழங்கியுள்ள சவித் விஷன் பதிப்பகம் இப்புத்தகத்தை வெளியிட்டுள்ளது. வழக்கறிஞர் ஆனந்தன் உள்ளிட்ட குழுவினரின் முயற்சி பாராட்டுக்குரியது.

சமூக நீதிக்கான அறப்போர்- நலிந்தோர் நலனுக்காக ஓர் வாழ்வின் அர்ப்பணம்

வெளியீடு: சவுத் விஷன் பக்கம்: 560 விலை: ரூ. 350.

## நீடு துயில் போக்க வந்த நிலா

நாகை மாலி

1936 ஆம் ஆண்டு லக்னோவில் நடைபெற்ற காங்கிரஸ் கட்சியின் மாநாட்டில் இடதுசாரிகளின் வற்புறுத்தலால் கிராமப்புற பாட்டாளிகளையும், விவசாயிகளையும் அமைப்பாகத்திரட்ட வேண்டும் என்ற தீர்மானம் நிறைவேறியது. இந்த தீர்மானத்திற்கு செயல் வடிவம் கொடுக்க கீழத்தஞ்சைக்கு வந்தவர்தான் தோழர் சீனிவாசராவ். கர்நாடக மண்ணிலிருந்து காவிரி மட்டும் தஞ்சை தரணிக்கு வரவில்லை, சீனிவாசராவும் வந்தார்.

கீழத்தஞ்சை மண்ணில் காலடி எடுத்து வைத்தபோது மார்க்ஸ், லெனின் கருத்துக்களை ஆழமாய் உள்வாங்கி இருந்தார். "இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் எதிர்கால விளைவுகள்" எனும் நூலில், இந்தியாவில் வர்க்க ஒடுக்குமுறைக்கும், சாதிய ஒடுக்குமுறைக்கும் உள்ள நெருங்கிய பிணைப்பை மார்க்ஸ் ஆராய்ந்து விளக்கியுள்ளார். சீனிவாசராவ் மார்க்சின் இந்த கருத்தை உள்வாங்கிக்கொண்டே கீழத்தஞ்சையில் செயல்பட்டார். அடித்தள மக்களை அணி திரட்டி கீழத்தஞ்சையில் செங்கொடி இயக்கத்தை வளர்த்தெடுத்தார். வர்க்க சுரண்டலை எதிர்த்த போராட்டத்தையும் சாதிய ஒடுக்கு முறைக்கு எதிரான போராட்டங்களை திறம்பட ஒன்றிணைத்தோடு அதை மக்கள் இயக்கமாக மாற்றியதால்தான் சீனிவாசராவ், தனித்துவமிக்க கம்யூனிஸ்ட்டாக போற்றப்படுகிறார்.

சாட்டையடி, சாணிப்பால் கொடுமைகளால் வதைப்பட்ட கீழத்தஞ்சை தாழ்த்தப்பட்ட மக்களை, பல நூறு ஆண்டுகளாய் நிகழ்ந்த சாதிய கொடுமைகளுக்கு எதிரான பெரும் போர்ப்படையாய் மாற்றினார்.

பண்ணையார் கொடுக்கும் சவுக்கடிகளால் தீயாக உடம்பு பற்றி எரியும். உரத்த குரலில்கூட அழுவதற்கு உரிமையற்ற மக்கள், நிலப்பிரபு சாட்டையால் அடிக்கும் போது வலி பொறுக்க முழயாமல் "அய்யோ" என்று அழக்கூடாது. அப்போதும் பண்ணையடிமை "அய்யா" என்றுதான் அழ வேண்டும். உரத்த

குரலில்கூட அழுவதற்கு உரிமையற்றிருந்தனர். உழவு மாடுகளைப்போலவே அந்த பண்ணை அடிமைகளும் உழவு மாடுகளாய் வாழ நேர்ந்தது.

இப்படியான தங்கள் அடிமை வாழ்விற்கு விடிவு கிடையாதா? என ஏங்கித் தவித்த பண்ணையடிமைகளுக்கு நம்பிக்கை ஒளியாய், விடிவெள்ளியாய், நீடு துயில் போக்க வந்த நிலவாய் கீழத்தஞ்சைக்கு சீனிவாசராவ் வந்தார்.

அரைக்கால் சட்டை, அரைக்கை மேல் சட்டை, கருப்புக் கண்ணாடி, தோளில் "ஜோல்னா" பை, சிவந்த மேனி, எதையோ சாதிக்க நினைக்கும் விழிகள் இவையே சீனிவாசராவின் தோற்றம். அச்சம் என்றால் என்னவென்று தெரியாதவர். செங்கொடி தாங்கி வீர முழக்கமிட்டு தஞ்சை பண்ணையடிமைகளை மீட்டெடுக்க வந்தார். சேரிகளுக்கு சென்றார். "நீங்களும் மனிதர்கள்தான் நிலபிரபுக்களும் மனிதர்கள்தான், உங்களுக்கும் இரண்டு கைகள், அவனுக்கும் இரண்டு கைகள், சாட்டையால் அடித்தால் திருப்பி அடி, என்னவந்தாலும் பார்த்துக்கொள்ளலாம், சங்கம் உங்களை பாதுகாக்கும்." "அடித்தால் திருப்பி அடி" என்று ஒலித்த முதல் போர்க்குரல் சீனிவாசராவின் குரலே.

சீனிவாசராவின் அனல் கக்கும் உரைகள் பண்ணை அடிமைகளை கிளர்ந்து எழச்செய்தது, ஆவேசம் ஊட்டியது. இடைவிடாது கிராமங்கள்தோறும் சென்றார். பண்ணையடிமைகளின் குடிசைகளில் தங்கினார். அவர்கள் தந்த கிழிந்த பாய்களிலும், சாக்குகளிலும் படுத்து உறங்கினார். அவர்கள் கொடுத்த கஞ்சியை சுவைத்து குடித்தார். இவர்தான் நமக்கானவர் என்ற நம்பிக்கையை லட்சக்கணக்கான பண்ணையடிமைகளின் நெஞ்சிலேற்றினார். பி.எஸ்.ஆர். என்ற மூன்றெழுத்து பண்ணையடிமைகளுக்கு போராடும் துணிவைத்தந்தது.

சவுக்கடியை நிறுத்து! சாணிப்பால் கொடுக்காதே ! கூலியை குறைக்காதே ! அடித்தால் திருப்பி அடிப்போம் என்ற முழக்கம் ஒவ்வொரு கிராமத்திலும் ஓங்கி ஒலித்தது. இதுவரை நிலபிரபுக்களின் கையிலிருந்த சாட்டைகளையும், சவுக்குகளையும் பண்ணையடிமைகள் தட்டிப் பறித்தனர். "அடித்தால் திரும்பி அடி" என்ற சீனிவாசராவின் அனல்பறந்த வீர முழக்கத்தைக்கேட்டு பரவசமடைந்துதான் பி.எஸ்;.தனுஷ்கோடி தமிழகம் போற்றும் தலைவராக தஞ்சையில் தோன்றினார்.

மேலை நாடுகளில் இருந்தது போன்ற அடிமை முறை கீழத்தஞ்சையில் இல்லாமல் இருக்கலாம். ஆனால், இங்கு நிலவிய பண்ணையடிமை முறையும், நிலபிரபுக்களின் ஒடுக்குமுறை வடிவங்களும் மேலை நாட்டில் நிலவிய

அடிமைத்தன ஒடுக்குமுறைக்குச் சற்றும் குறைந்ததல்ல. அந்த அடிமைத்தனத்தை சுக்கு நூறாய் அறுத்தெறிந்த சீனிவாசராவை அதனால்தான் கீழத்தஞ்சை மக்கள் நெஞ்சில் நிறுத்தி போற்றி கொண்டாடுகிறார்கள்.

தியாக வாழ்க்கைக்கு சொந்தக்காரர் சீனிவாசராவ். அந்த ஒப்பற்ற கம்யூனிஸ்டின் தியாகத்தின் விளைச்சலே இன்று நாம் காணும் கீழத்தஞ்சை. தான் வாழ்ந்து போராடிய காலத்திலேயே பண்ணையடிமை முறையை ஒழித்துக்கட்டியவர். ஆட்சியாளர்களும், அதிகாரவர்க்கமும் அவரை வேட்டையாட எவ்வளவோ முயன்றும் அசைத்துக்கூட பார்க்க முடியவில்லை.

ஏற்றுக்கொண்ட லட்சியத்திற்காக இறுதி மூச்சு வரை பாடுபட்டார். ரோமாபுரி அடிமைகளை விடுவிக்க போராடிய அடிமை வீரன் ஸ்பார்ட்டகஸை போல், தஞ்சை பண்ணையடிமைகளை நிலபிரபுக்களிடமிருந்து மீட்டெடுக்க சீனிவாசராவ் போராடினர்.

இந்திய வர்க்கப்போரின் வரலாற்றில் தஞ்சை மண்ணில் இவர் நிகழ்த்திய சாதனை பொன் எழுத்துக்களில் பொறிக்கப்பட வேண்டியவை. பி.எஸ்.ஆர். கூலிக்காக மட்டும் போராடவில்லை. அடித்தட்டு மக்களின் சுயமரியாதைக்காகவும் உரிமைகளுக்காவும் போராடினார்.

“பி.எஸ்.ஆர். துணிச்சல் மிக்கவர் - மேலும் துணிச்சல் மிக்கவர் - மென்மேலும் துணிச்சல் மிக்கவர்” என்றார் ஜீவா.

கீழத்தஞ்சை மண் இன்னும் செங்கொடி இயக்கத்தின் மாபெரும் மக்கள் தளமாக உள்ளதென்றால், அதற்கு பி.எஸ்.ஆர். போட்ட அடித்தளமே காரணம். தமிழகத்தின் மற்ற பகுதிகளை ஒப்பிடும் போது இங்கு தீண்டாமைக்கொடுமையின் தீவிரம்குறைந்து காணப்படுகிறதென்றால் அதற்கும் சமூக, பொருளாதார தளங்களில் தோழர் பி.எஸ்.ஆர் முன்னெடுத்த மக்கள் போராட்டங்களே காரணமாகும்.

பன்முக தளங்களில் செயல்பட்ட தோழர் டி.இலட்சுமணன்

என்.எல்.ஸ்ரீதரன்

நாட்டு மக்கள், சாதி மத பேதமின்றி, ஒன்றுபட்டு ஆங்கிலேய

ஏகாதிபத்தியத்தை எதிர்த்து வீரஞ்செறிந்த போராட்டங்களை நடத்தி வந்த காலகட்டத்தில் பிறந்து வளர்ந்தவர்தான் தோழர் டி.லட்சுமணன். அவர் படித்து அரசுப்பணிக்கு வந்த காலகட்டம் விடுதலைப்போராட்ட கனவுகள் நிறைவேறாமல் மக்களிடையே அதிருப்தி நிலவிவந்த காலமாகும். அப்போது தமிழ்நாட்டில் பகுத்தறிவுக் கருத்துகளும் பொதுவுடைமைக் கருத்துகளும் நாடகங்களிலும் சினிமாக்களிலும் பரவலாக பிரச்சாரம் செய்யப்பட்டு வந்தன.இவைகளின் தாக்கம் துவக்க காலத்திலிருந்தே தோழர் DL இடம் இருந்துள்ளது. இதை அவரே அவருடன் அளவளாவிய காலங்களில் உணர்வுபூர்வமாக தெரிவித்தள்ளார்.

சமூகத்தில் மக்கள் சாதி, மத பேதங்கள் இல்லாமல் ஒன்றுபட்டு வாழ்ந்தால்தான் அனைவரும் வாழ்வில் முன்னேற முடியும் என்கிற கருத்துக்களை அவர் அவருடைய சங்க நடவடிக்கைகளின் ஆரம்ப காலத்திலேயே வலியுறுத்தி வந்தார். தமிழக அரசு ஊழியர் இயக்கம் உயிர்ப்புடன் செயல்படாமல் அரசிடம்

பணிந்து கிடந்த காலத்தில், அரசு ஊழியர்களின் உண்மையான பிரதிநிதியாக
செயல்படக்கூடிய ஒரு உயிர்ப்புள்ள சங்கத்தை உருவாக்கிட செயலாற்றினார். அன்றைய காலத்தில் அரசு ஊழியர்களிடையே நிலவிவந்த சமூக ஒற்றுமைக்கெதிரான கருத்துக்களிலிருந்து அரசு ஊழியர்களை விடுவிக்க தொடர்ந்து அவர்களிடையே பேசியும் எழுதியும் போராடியும் வந்துள்ளார். அதில். அவர் பெருமளவு வெற்றியும் பெற்றுள்ளார்.

அரசுப்பணியிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு அவர் தன்னை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியில் இணைத்துக்கொண்டு படிப்படியாக பல பொறுப்புகளில் இருந்த எல்லா காலங்களிலும் "மத நல்லிணக்கம் மற்றும் சமூக நல்லிணக்கம்" ஆகியவற்றை உயர்த்திப்பிடிக்கவும் அவைகளுக்காக போராடவும் முன்னின்று பாடுபட்டுள்ளார். பம்பாய் கலவரமும் கோவைக்கலவரமும் நடைபெற்ற காலங்களிலும் பாபரி மஸஜித் இடிக்கப்பட்ட காலங்களிலும் நடந்த மாநாடுகளிலும் கருத்தரங்களிலும் பொதுக்கூட்டங்களிலும் அவர் ஆற்றிய சொற்பொழிவுகள் பலரிடையே பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளன.

இடதுசாரி கட்சிகளின் நிபந்தனைகளுடன் கூடிய தேசிய முற்போக்கு கூட்டணி ஆட்சியில் வெளியிடப்பட்ட சச்சார் குழு அறிக்கை வெளியிடப்பட்ட போது அதைப்பற்றிய விளக்கங்களை இஸ்லாமிய

மக்களிடையே கொண்டு செல்லவும் அதை அமுல்படுத்த வலியுறுத்தி நடைபெற்ற போராட்டங்களில் அவர்களை அணிதிரட்டவும் அரும்பாடுபட்டுள்ளார்.

சிறுபான்மை மக்கள் நல மாநில மற்றும் மாவட்ட மாநாடுகளில் சிறுபான்மையின கிருஸ்துவ மற்றும் முஸ்லிம் தலைவர்களை பங்கேற்க வைக்க தோழர் DL தீவிரமாக பணியாற்றியுள்ளார்.. மாநாடுகளில் அவர் ஆற்றிய சொற்பொழிவுகள் ஏராளமான தகவல்களை உள்ளடக்கியவைகளாகவும் பிரச்சினைகளை எல்லோரும் எளிதாக புரிந்துகொள்ளக்கூடியவைகளாகவும் இருந்தன.தன் சொந்த வாழ்க்கையிலும்
முற்போக்கு கண்ணோட்டங்களுடன் வாழ்ந்தார். தன் மகனுக்கு ஒரு இஸ்லாமியப் பெண்ணை திருமணம் செய்து வைத்துள்ளார்.

மாற்றுத் திறனாளிகள் அமைப்பினை தமிழகத்தில் கட்டுவதற்கும் அதன் வளர்ச்சிக்கும் இறுதி வரை அரும்பணி ஆற்றினார். தோழர் DL மார்க்சிஸ்ட் கட்சியின் மாநில செயற்குழுவிலிருந்து பல பணிகளை ஆற்றிக் கொண்டு கட்சிக்கல்வி பணிகளையும் மேற்கொண்டார். தோழர் பி.ஆர் . பரமேஸ்வரன், தோழர் பி.ராமச்சந்திரன் ஆகியோரோடு இணைந்து கட்சிக்கல்வி பணிகளை மேற்கொண்டு வந்தார்.ஏராளமான தோழர்களுக்கு அவரது எளிமையான வகுப்புக்கள் மார்க்சிய அரசியல் தத்துவார்த்த பயிற்சி பெற உதவியாக அமைந்தன.

தோழர் DL மார்க்சிஸ்ட் இதழின் ஆசிரியர் குழுவில் நீண்ட காலம் பணியாற்றினார்..அடிப்படை மார்க்சியம், சாதியம், வகுப்புவாதம் என பல தலைப்புக்களில் எளிமையான பல கட்டுரைகளை எழுதியுள்ளார். தோழர் DL மறைவு மார்க்சிய இயக்கத்திற்கும் மக்கள் இயக்கங்களுக்கும் பேரிழப்பு.